*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத்.—**Speak the Truth.**

"Hitch your Wagon to a Star." "To Thine Own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 14.] 1905-ம்வூ ஜூன். [சஞ்சிகை 2.

# The Two Poles of Man—Impulsions and Inhibitions.

"Life is energy of Love
Divine or human——
——and ordained,
If so approved, and sanctified, to pass
Thro' shades and silent rest to endless Joy."
—*Wordsworth.*

"The little needle always knows the North,
The little bird remembereth his note,
And this wise Seer within me never errs.
I never taught it what it teaches me:
I only follow when I act aright."—*Emerson.*

"Man's conduct appears as the mere resultant of all his various impulsions and inhibitions. One object, by its presence, makes us act: another object checks our action. Feelings, aroused and ideas suggested by objects sway us one way and another: emotions complicate the game by their mutual inhibitive effects, the higher abolishing the lower or perhaps being itself swept away. The life in all this become prudential and moral; but the psychologic agents in the drama may be described, you see, as nothing but the 'ideas' themselves,—ideas for the whole system of which what we call the 'soul' or 'character' or 'will' of the person is nothing but a collective name. As Hume said, the ideas are themselves the actors, the stage, the theatre, the spectators and the play. This is the so-called 'associationist' psychology, brought down to its radical expression: it is useless to ignore its power as a conception. Like all conceptions, when they become clear and lively enough, this conception has a strong tendency to impose itself upon belief; and psychologists trained on biological lines usually adopt it as the last word of science on the subject. No one can have an adequate notion of modern psychological theory unless he has at some time apprehended this view in the full force of its simplicity.

"*Voluntary action, then, is at all times a resultant of the compounding of our impulsions with our inhibitions.*"

"The highest form of character, however, abstractly considered, must be full of scruples and inhibitions. But action in such a character, far from being paralized, will succeed in energetically keeping on its way, sometimes over powering the resistances, sometimes steering along the line where they lie thinnest.

"Just as our flexor muscles act most firmly when a simultaneous contraction of the flexors guides and steadies them; so the mind of him whose fields of consciousness are complex, and who, with the reasons for the action, sees the reasons against it, and yet, instead of being palsied, acts in the way that take the whole field into consideration,—so, I say, is such a mind the ideal sort of mind that we should seek to reproduce in our pupils".—*Talks to Teachers on Psychology by Prof. W. James.*

" வேதாந்தங்கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங்கேட்டுந் தம்வேட்கை யொழிந்திலர்
வேதாந்தமாவது வேட்கை யொழிந்திடம்
வேதாந்தங்கேட்டவர் வேட்கை விட்டாரே."

" சத்தியமின்றித் தனிஞானந் தானின்றி
யொத்தவிஷயம் விட்டோரு முணர்வின்றிப்
பத்தியுமின்றிப் பானுண்மையின்றி யூண்
பித்தேறு மூடர் பிராமணர் தாமன்றே."

" திருநெறியாகியசித்தசித்தின்றிக்
குருநெறியாலேகுருபதஞ் சேர்ந்து
கருமநியமாதிகைவிட்டுக் காணுந்
துரியச்சமாதியாந்தூய்மறையோர்க்கே."

" பிண்டத்தினுள்ளூறு பேதைப் புலனைந்தும்
பிண்டத்தினூடே பிறந்துமரித்தது
அண்டத்தினுள்ளூறு சீவனுமவ்வகை
அண்டத்துநாதத்தமர்ந்திடுந்தானே."

# "ஆசாபாசம்"—"இராகத்துவேஷம்."

## இவற்றைக்கடக்குமுபாயம்.

" இருவினைநேரொப்பவின்னருட்சத்தி
குருவெனவந்துகுணம்பலநீக்கித்
தருமெனஞானத்தாற்றன்செயலற்றால்
திரிமலந்தீர்ந்துசிவனவனுமே."—திருமந்திரம்.

சென்ற சஞ்சிகையில் "உடல்-உயிர்" அல்லது 'தேகம்-தேகி' என்று சொல்லும் க்ஷேத்ர க்ஷேத்திரக்ஞ விபாக யோகத்தை சமயோசிதமாய்ச் சொல்லி ஒரு விதத்தில் விளக்கிக் காட்டினோம். இதே விஷயத்தை பகவத் கீதை 13-வது அத்யாயத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ச்சுனனுக்கு சாங்கோபங்கமாகச் சொல்லி விளக்கிக்காட்டியிருக்கிறார். ஜீவனுக்கு போகத்துக்குக் காரணமான இத்தேகம் 'க்ஷேத்திரம்' என்று சொல்லப்பட்டது ஏன் எனில்:—"முக்குணமுள்ள பிரகிருதியானது காரியகாரண ரூபமாய்ப் பரிணமித்து தேகேந்திரியாதி ஆகாரங்களாய் புருஷனுக்கு போகம் மோக்ஷம் இவைகளுண்டாகவேண்டியதற்காக க்ஷேத்திரமாயாகிறது. அந்த க்ஷேத்திரமென்கிற தேகமானது குறைதல்முதலிய விகாரத்தை யடைகிறபடியினாலேயும், பூமியானது பயிர்முதலிய பலனைக் கொடுப்பதுபோல், கருமபலனைக் கொடுப்பதினாலேயும், க்ஷேத்திரமென்று சொல்லப்படுகிறது."

இப்படி போகத்துக்குக் காரணமாயிருக்கிற தேகத்திலிருந்து இதைத் தனக்கு போகபூமி யென்றறிந்து அந்த போகத்தை யனுபவிக்கிறவன் எவனோ அவன் 'க்ஷேத்திரக்ஞன்'—ஆத்மா வென்றும் ஜீவன் என்றும் சொல்வர்.

க்ஷேத்ரக்ஞஞ்சாபிமாம்வித்திஸர்வக்ஷேத்ரேஷு—பாரத
க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞயொர்ஞானம்யத்தத்க்ஞானம்மதம்மம.

ஓ! அர்ச்சுன சகல தேகங்களிலேயும் என்னையே க்ஷேத்ரக்ஞனை அறி. தேகம் ஆத்மா இவைகளுடைய விவேக ஞானம் எதோ (ஆத்மா இப்படிப்பட்டவன், தேகம் இப்படிப்பட்டதென்கிற பகுத்தறிவு) அதே ஞானமென்பது என்னுடைய நிச்சயம்.

தேகாத்ம விவேக ஞானத்தைத் தவிர மற்றஞானம் ஞானமல்ல. எப்படி நிஷ்காம கருமமே கருமம், மற்ற ஸகாம கருமம் கருமமல்லவோ; அப்படிப்போல் மோக்ஷசாதனமான ஆத்மாநாத்ம ஞானமே ஞானம். மற்ற ஞானமெல்லாம் அக்ஞானமே. அந்த ஆத்மா யார் என்றால், "தத்துவமஸி" என்ற வாக்கியத்தின் லக்ஷியார்த்தமான சித்ஸ்வரூபமாயும், சகல தேகத்திலும் தொடர்ச்சியாயு மிருக்கிற தெதோ அதுதான். இப்படிப்பட்ட அறிவுதான்

ஞானம்—என்று ஸ்ரீதரஸ்வாமிகள் இதன்மேல் வியாக்கியானம் செய்திருக்கிறார். ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகள் அவருடைய பாஷ்யத்தில் பின்வருமாறு விவரித்து இந்த சுலோகத்தின் கருத்தை வெளிப்படுத்தி யிருக்கிறார் :—

"க்ஷேத்திரக்ஞன் நானென்று சொன்னதினாலும், க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ விவேகமே ஞானமென்று சொன்னதினாலும், ஈசுவரன் தான் க்ஷேத்திரக்ஞனென்றும், அந்த ஈசுவரன் இப்படிப்பட்டவன் க்ஷேத்திரமிப்படிப்பட்ட தென்றறிகிறதே ஞானமென்றும் ஏற்படுகிறது. இதினாலே, ஈசுவரனுக்கே சமுசார பெந்தமு மோக்ஷமு மென்றாகிறது. சமுசார பெந்தத்தையுடையவன் ஈசுவரனாகவும் மாட்டான். ஈசுவரனென்றால் அவனுக்கு சமுசாரபெந்த மென்பது கூடாது. ஆகையால், ஈசுவரனே க்ஷேத்திரக்ஞனென்று சொல்வது கூடாது என்னும் ஆக்ஷேபனை சரியானதல்ல. ஈசுவரனுக்கு சமுசாரம் முதலியன எப்பவும் கிடையாது. அவித்தையினால் ஈசுவரனிடத்தில், சமுசாரம் முதலியன ஆரோபிக்கப்படுகின்றன. அதெப்படி யென்றால், கானலில் ஜலமும், கிளிஞ்சலில் வெள்ளியும், பழுதையில் பாம்பும் அக்ஞானத்தில் எப்படி ஆரோபிதமோ, அப்படிப்போல சுவபாவமாக சமுசாராதி பெந்தமுள்ள ஒரு வஸ்து இருக்குமானால் அதற்கு நிவிருத்தி யென்பதே கூடாது. நிவிருத்தி யுண்டென்னும் பக்ஷத்தில் அது சுவபாவமல்ல. ஆகந்துகமென்றே சொல்லவேண்டும். எப்படி என்றால் அக்னிக்கு உஷ்ணம் சுவபாவம். உஷ்ணம் நீங்கி அக்னிக்கு இருப்புண்டோ? இல்லை. ஜலத்திற்கு சீதளம் சுவபாவம். அக்னி சம்பந்தப்பட்டால் சீதள சுவபாவம் மாறி அக்னி சுவபாவமான உஷ்ணமாய் மாறுகிறது. அந்த உஷ்ணம் தணிந்த உடன் மறுபடி சீதளமாய் விடுகிறது. ஜலத்திற்கு உஷ்ணம் ஆகந்துகமானதால், நிவிருத்தியுண்டு. ஆகையால், ஈசுவரனிடத்தில் சமுசாரம் ஆரோபிதம், அப்படியுண்டான ஆரோபத்திற்குக் காரணம் அவித்தையாகிற அக்ஞானமே; ஆத்மா வாஸ்தவத்தில் அவித்தையை யுடையவனல்ல. சந்திரன் இரண்டாகக் காணப்பட்டால், அப்படி காணப்படுவது தோஷமாகிய கண்ணின் உபாதியினாலேயேயன்றி வாஸ்தவமல்ல. கண்ணின் உபாதியாகிய தோஷத்தை நீக்கிப்பார்த்தால், சந்திரனிரண்டென்பது ஆரோபிதமே யென்று விளங்கும்; அப்படிப்போல சமுசாரம் முதலிய பெந்தமும் மோக்ஷமும் வாஸ்தவத்தில் ஆத்மாவுக்கில்லை. ஆத்மா ஒன்றை விடவேண்டியதுமில்லை; ஒன்றைப்போய் அடையவேண்டியதுமில்லை. ஆகையால் ஆத்மாவாகிய ஈசுவரன் அவிக்கிரியன். அவித்தையினால், சமுசாரம் அவனிடத்தில் ஆரோபிக்கப்படுகிறது. சகல விக்கிரியைகளும் அவித்தியாகாரியம்.—என்று அறிகிற ஞானமே ஞானமென்பது என்மதம்—என்பது கருத்து."

க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாகயோகத்தைச் சொல்லும் இந்த அத்தியாயமே "ஏக்மேவாத்விதீயம்" என்னும் சுருதிவாக்குப்படி இரண்டற்று ஏகமாகவிளங்கும் எங்கும் நிறைந்த பரிபூரணமான ஈசுவரனது (நிர்க்குண ப்ரமத்தினது) இரண்டு சக்திசுபாவங்களான பராப்பிரகிருதி, அபராப்பிரகிருதி என்னும் இவற்றின் தத்துவநிச்சயத்தின் பொருட்டும், ஞானிகள் எந்ததருமத்தை யனுஷ்டிக்கிறதனால் பகவானுக்குப் பிரியமானவராவார்களோ அதைத் தெரிவிக்கும்பொருட்டும் தொடங்கினதாக விருக்கிறது. இந்த இரண்டு பிரகிருதி

களையும் சித்சக்தி, சடசக்தி யென்றும் சொல்வார்கள். பின்னதான சடசக்தியே "அபராப் பிரகிருதி:" அதாவது—சமுசார ஏதுவானதும் எட்டுவிதமாய்ச் சொல்லப்பட்டதும் முக்குணங்களையுடையதுந்தான். இந்த எட்டுவிதமாய் சொல்லப்பட்டது 7-வது அத்தியாயம் 4-வது சுலோகத்தில்,—

பூமிராபொநலோவாயுப் கம்மநோ புத்திரேவச
அஹங்கார இதீயம்மே பங்நாப்ரகிருதிரஷ்டதா.

என்று சொல்லியிருப்பதால்,—"என்னுடைய பிரகிருதியே பூமி, ஜலம், அக்னி, காற்று, ஆகாசம், மனசு, புத்தி, அகங்காரம் இப்படி எட்டுவிதமாய் பிரிந்திருக்கிறது." இதனால் பஞ்சதன்மாத்திரைகளான சூக்ஷ்மபூதங்களுடன் மனசு, புத்தி, அகங்காரம் என்னும் மூன்றுசேர்ந்து எட்டுவிதமாகிறது. இதுவே இந்த 13-வது அத்தியாயத்தின் 6-வது சுலோகத்தில் 24-ஆக விரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த பிரகிருதி தத்துவங்களை சுருக்கியும் விரித்தும் 8-முதல் 96-வரையில் பலவிதமாகச் சொல்வார்கள். இதுதான் அபராப் பிரகிருதி—நிகிருஷ்டமான (தாழ்ந்த) பிரகிருதி. இதைப் பார்க்கிலும் வேறானதும், எந்தப்பிரகிருதியினாலே இந்தப் பிரபஞ்சமானது தரிக்கப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்டதும் (ஜீவபூதாம) ஜீவசுவரூபமானதும் (பிராணனைத் தரிக்கிறதற்கு ஏதுவானதும்) என்னுடைய சுவரூபமான (அம்சபூதமான) துமான அந்தப் பிரகிருதியை (பராம்)சிரேஷ்டமென்று அறி." இந்த பராப்ரகிருதியானது ஜீவபாவத்தை யடைந்த ஈசுவரனுடைய சுவரூபமாயிருக்கிறது. ஒன்று சூக்ஷ்மமாயும் ஒன்று ஸ்தூலரூபமாயும் இருக்கிறது. இந்த ஸ்தூலம் அவயக்தப் பிரகிருதி வரையிலும், சூக்ஷ்மம் சித் அல்லது தத்புருஷன் வரையிலும் கிரமக்கிரமமாகச் செல்லும். இந்த இரண்டு பிரகிருதிகளால், ஈசுவரன் ஜெகத்தின் உற்பத்தி ஸ்திதிலயங்களுக்குக் காரணமாகிறார். இந்த இரண்டு சக்திகளும் பூரணமாகச் சேர்ந்து விளங்குவது மனிதனில். சத்-அசத் அல்லது சித் - சடமிரண்டுக்கு மிருப்பிடமாயிருந்து இவற்றிற்கு அதீதமாயுள்ள ஈசுவரன் அல்லது பரமாத்மாவோடு இரண்டறக் கலந்தைக்கியமாகும் சக்தி மனிதனுக்கே விசேஷமாயுள்ளது. அப்படிப்பட்ட மனிதன் தன் பெருமையிழந்து சிறுமைப்பட்டு, நான் தேவன், நான் மனிதன், நான் பெருத்திருக்கிறேன், நான் இளைத்திருக்கிறேன், நான் சுகி, நான் துக்கியென்று சொல்லிக்கொண்டு அற்பசுகத்தில் தன் வாணாளைக்கழித்து வீணே தேகத்தை யெடுப்பதும் கழிப்பதுமாக அலைவானேன் என்று பார்த்தால், அவன் மற்ற எல்லா சிருஷ்டிகளைப்போலும் மாயையின் வலையாகிய த்வந்தபாவனையிலகப்பட்டு இங்குமங்கு இழுக்கப்பட்ட லறியமுது வருந்துகிறான் என்பது ஆய்ந்தோய்ந்து சிந்திப்பார்க்குத் தெள்ளிதாக விளங்கும். இதற்கு Prof Hæckel, Huxley, Spencer முதலான மேதாவிகள் நூலைக்கற்றுக் கல்வியுணர்வின்றி யுளறும் வித்வான்கள் உதவிவேண்டாம். ஆசைவிட்டு, நேசம்வைத்து ஈசா என்று உள்ளில் நினைந்துருகினால் உண்மை தானேவெளியாகும். இப்படி உண்மை புணரவேண்டி நைந்துருகிச் சிந்தை தெளிந்தால் அதுவே அருள் வெளிச்சமாம். கல்வியறிவில்லா மாந்தரும ஆசைவிட்டு நேசம்வைத்து உண்மை புணரவேண்டி உளங்கரைந்துருகிநைந்தால்" "திருவருட்கைவல்யம்" என்னும் அருட்பேறு அல்லது சித்தசுத்தி அல்லது மனத்தெளிவு உண்டாகும்.

I.

"சிந்தையதென்னச் சித்தென்ன வேறில்லை
சிந்தைதெளிந்திடச் சித்ததுவாமே
சித்ததுவாவது முள்ளொளிதானே
உள்ளொளி விளங்கிடும் சித்சபையாமே."

"அருளெனப்படுவது மருளற்ற சிந்தை
மருளேயிருளில் மயக்க மச்சமுமாம்
மயக்கந்தானறும்மாசற்றசிந்தையில்
சிந்தைதெளியத்தெளியச்சிவமதுவாமே."

நம்மவரில் ஆங்கிலேய நூலாராய்ச்சி மிகுதியும் செய்தும் சாஸ்திரராய்ச்சிகள் நுட்பமாய்ச் செய்தும் அகம்பாவமடங்காது ஆத்மாநாத்மவிவேகமின்றி உளறும் வித்துவான்கள் வார்த்தையைக் கேட்பதிலும், ஒரு படிப்புமின்றி பக்தி மேலீட்டால் ஈசுவராவென்று தெய்வத்தை நினைந்து மனங்கனிந்து அழுதழுது மனத்தெளிவு (அருள்) பெற்றவர்கள் அனுபவத்தைக் கேட்டாராய்வது மனதுக்கு எவ்வளவோ ஆறுதலும் தேறுதலுமா யிருக்கிறது. இப்படிக் கல்வியறிவில்லாது கரைந்துருகி யழுதழுது அருள்பெற்ற ஒரு அன்பர் அவருக்கு "திருவருட்கைவல்யம்" சித்தித்ததைப் பற்றி அவரதனுபவத்தைச் சொல்லிப் பாடிய பாடல்புஸ்தகமொன்று நமக்குக் கிடைத்தது. இந்த அன்பரை நேரிலறியும் பாக்கியம் பெற்றுளோமாதலால், இவருடைய அனுபவமெல்லா முண்மையே யென்று உள்ளபடியுறுதிகூற வல்லேம். ஆகையால் அவர் வாய்மொழியாகப் பிறந்த வாக்கையே உதாரணமாக வெடுத்தாள மனமுவந்தோம். 109-பாடல்கள் கொண்ட 'திருவருட்கைவல்லியத்தில்' அவர் சொல்கிற ஒரு அனுபவம் சிற்றின்பப்பிரியாராகிய நம் எல்லாருக்கும் பொதுவாகப் பொருந்துமாதலால் அதை யிங்கெடுத்து வரைகிறேம்.

"இருந்துகொண்டுலகவின்ப மெய்துகின்றோமே யென்னின்
வருந்துவதளவோவில்லைவந்தசிற்றின்பந்தானும்
இருந்ததன்சுவடும்மாய்ந்துவந்ததன்வழியுந்தூர்ந்து
பொருந்து பொன்னுமைநெஞ்சைக் குரங்காக்கிப் போகுமந்தோ."

இவர் அருள்பெற்ற அனுபவத்திலிருந்து ஜகத்துக்கெல்லாம் குருவாகிய ஸத்குருவின் தயவாந் தன்மையைக் கூறுவது முண்மையாயும், உன்னுவோர்க்குவகை யூட்டுவதாயுமிருக்கிறது:—

"என்பெலா முருகநாடி யிருகணீர் சொரியத்தேடி
அன்பினுலழுதுவாடி யழைத்திட்டால் விரைவிலோடி
இன்பெலாமொன்றாய்க் கூட்டியெடுத்ததோர் வடிவங்காட்டித்
தன்பதம் சூட்டுகின்ற தயவன்றோ வையன்தன்மை."

இப்படிப்பட்ட ஐயன் (ஈசுவரன்) தனக்காக ஒன்றும் வேண்டாதவனுயினும் தன்னிடத்தெல்லா மகிமையும் பொருந்தப்பெற்ற தபோநிதி பூரணமுடையானாகியும், அதனைப் பெறுவதற்குப் பாத்திரரான சுத்தசீலரைத் தேடி யலைந்தவண்ண மிருக்கிறானென்று அவர் சொல்வதும் உண்மையாகவும் உருக்கமாகவுமிருக்கிறது.

"தனக்காகவொன்றும்வேண்டான்தபோநிதிபெரிதுமுள்ளோன்
'எனக்காகஅதனைத்தா'வென்றேற்பாரைநாடுகின்றான்
தினைக்காலம்த்யானித்தாலும்சிந்தையேகோயில்கொள்வான்
நினைக்காமல்வந்துநின்றும்நேர்படாதிருக்கலாமோ."

"பெறுதற்காயுள்ளவெல்லாம் பெற்றுளான்" ஆகிய ஈசன்; ஆசைக்கடலில் விழுந்து இராகத்துவேஷமென்கிற அலைகளிலகப்பட்டு சுகதுக்கமென்கிற பாறைகளில் மொத்

துண்டு தவிக்கும் சீவனைக் கரையேற்றுவான் பரிபக்குவம்பெற்ற உபாஸகனுக்கு நடராஜ குருமூர்த்தியாய் வந்து தரிசனந்தந்தாளும் அற்புத ரகஸியத்தை யவர் பின்வரும் பாவில் வெகு அழகாகவும் உருக்கமாகவும் கூறுகிறார் :—

“ மாயையை மிதித்துநின்ற வல்லவன், ஆசைப்பித்தால்
ஓய்விலா துளறுகின்ற உளமெலாம் கண்டபோதே
வாயினைப்புதைத்துநிற்கவருபவன், வந்துநின்றும்
தாயினைக்கண்ட சேயாச்சரண்புகா திருக்கலாமோ.”

எண்ணினர்க்கெண்ணின வண்ணமிருந்தருள் புரியுமீசன், உளங்கனிந்தார்க்குண்மையை போதுவான் அவரவர்கள் எண்ணம்போல் வந்துதித்தும், விசாரஞானமும் விவேக பூர்த்தியுமில்லா மந்தமதிகள் அச்சமயத்தை முன்னிட்டு ஆத்மஞானம்பெறத் தாழ்ந்து தவிப்பதுமுண்டு. இப்படி யவன் சூதறியாமையால் நாம்பட்ட துன்பம் பெரிது பெரிது. இதேயனுபவத்தை யவர் பின்வரும் செய்யுளிற் செவிக்கினிய மொழிகளாற் கூறுகின்றார் :—

“ சேய்கட்குச் சேயாய்நிற்பான் தெளிந்தார்கட் கீசனுவான்
காய்களைக் கல்லைக்கூடக் கனிபாக்கும் விச்சைகற்றான்
நாய்களிற் கடையாம்நம்மை நாணுமலாளவந்தும்
தாள்களிற் சரணமாகத் தாழாமலிருக்கலாமோ.”

இஃதெல்லாம் உளங்கனிந்து உண்மையையறியத் தபித்தவர்களுக்கே தேவாமிர்தமாக விருக்கும். மற்றவர்கள் அரட்டைபேசிக் கரட்டுவாதமிட்டு உருட்டிமருட்டி இருட்டிலலைவர். இவர்கள் அகம்பாவத்தா லழிந்துகெட்டால் நாமும் அவர் பின்பற்றியோடி யழிய வேண்டிய நிமித்தமில்லையே. நாம் பின்பற்றத்தக்க வேறொரு வகையாருண்டு. அவர் வழிபற்றிச் சென்றாலே உய்யலாம். அந்த அடியார் நிற்கும் நிலை யென்னோவென்றால் :—

“ நானெனுமகந்தை வெய்யில் நலிதர அடியர்யாரும்
வானென வயங்கும்நாதன் மலரடி நிழலிற்போகி
யானென்பதறவுமூழ்கி யின்பமேவடிவமாகி
ஊனொடுமுறவுபோக்கியொருநிலைநிற்கின்றாரே.”

அகந்தை மேலிட்டு அதன்வழியே செல்வோமென்பார் அதனாலுறுபயனின்னதென்றுணர்ந்துய்ய இஷ்டமுண்டேல் இதைக்கேட்டு எச்சரிப்பாயிருப்பார்களாக :—

“ மூலமாமகந்தைவித்துப் பேதமாம் முளையைத்தோற்றிக்
காலமாங்குருத்தையீன்று தேசமாமிலையைக்கான்று
வேலையாங்கிளைகள் சாய்த்து விஷய வாசனைகள் பூத்து
மாலையாம் துயர்கள்காய்த்து மரணமே கனிந்துநிற்கும்.” *

* “ ஏதமாமகந்தைவ்ருக்ஷமெங்குமாய்க் கவர்ந்துகொண்டு
போதமாம்பொருளைக் காட்டாதடியிலே புதைத்துக்கொண்டு
பேதமாம் பொருள்கள்காட்டிப் பிறப்பிறப்பெல்லாங் காட்டும்
ஆதலாலகந்தைவேரை யரிந்திடல் அறிவின்மூலம்.”

* Such is the Maya Vriksham—the Tree of Knowledge of Good and Evil.

"அகம்பாவம் பிடித்தையா நீங்கள் அழிந்தேதான் போகிறீர்கள்"—என்றது பலவாற்றானு முண்மையுண்மை. இந்த அகம்பாவம் தடித்துள்ளவரையில் நம்மவர்களுக்கு உண்மை யொருக்காலும் உளத்திற்றோன்றாது. "அகங்காரத்தை விட்டொழித்தால் அறிவீர் நீர் அதிசயத்தை"— யென்றதின் மர்மத்தை யிவர் பலவிதமாய் விரித்துச் சுட்டி, எப்படிச் சுட்டினாலும் "அறிந்தவரறிவதல்லால்" "எப்படிக் காணாதாரிங்கியம்பிய மொழியாற் காண்பர்" என்று உண்மையாகக் கேட்கிறார். ஏனெனனில் "மவுனவித்தையை"த் தெரிவிக்க "மொழியுமுண்டோ?" அப்படியானால் ஏன் இந்த உளறல் குளறலெல்லாம் என்று ஒரு துடுக்குக் கேள்வி பிறக்கலாம். அதற்கு சமாதானம் அவரே சொல்கிறார் :—

"பொருள்களைக் கண்ட பின்பே மொழிகளைக் கட்டிவைத்தோம்
பொருள்களைக் காணாதார்க்கு மொழிகளோ பொருளைக்காட்டும்
பொருள்களில் மொழியுமில்லை மொழிகளிற் பொருளுமில்லை
பொருள்களோ பொருளைக்கட்டும் மொழிகளோ மொழியைமூட்டும்."

அப்படியானால் மனோவாக்குக்கெட்டாத அந்த உண்மைப் பொருளையறிவதுதான் எப்படியெனிலோ கேண்மின் :—

"கட்டிய மொழிகள் கண்ட பொருளையே காட்டும் கையாற்
றொட்டிலாக் காணுக் கேளாச் சுவைத்திலா மோவா வொன்றைக்
கட்டிலா அப்பன் வந்து காட்டியே காணவேண்டும்
தொட்டுமே காட்டாவித்தை சுட்டுப்போட்டாலுமுண்டோ."

அந்த மௌன வித்தையின் சிறப்பைப் பின்னும் நன்குணர வற்புறுத்திக் கூறுகிறார் :—

"மாயிரு ஞாலந்தன்னின் மக்களாய்ப் பிறந்தோருள்ளம்
போயடைந்தாறுகின்ற போதமா மௌனதேசம்
தூயசத்குருநாதன்தான் தொட்டுக்காட்டாமற் போனால்
ஆயிரங் கோடிகாலம் அலையினு மறிவதுண்டோ."

ஆங்கிலேய சாஸ்திரத்திலாழ்ந்து பயின்ற நண்பர்கள் "அருள் என்றாலென்ன? ஆத்மா வென்றாலென்ன? இருந்தால் பிரத்தியக்ஷமாகக்காட்டு: நீயறிந்தால் எனக்கென்னாச்சு?" என்று விதண்டாவாதம் செய்து ஆங்கிலேயப் பத்திரிகைகளில் ஆர்ப்பாட்டஞ் செய்வதை யுன்னியுரைத்தார்போலும் இப்பாடல்கள் அவர்களுக்கு நன்றாகப் பொருந்தியிருப்பது பற்றி யிங்கேவரைகிறோம் :—

"வெம்பிய பொறிகளூடே மேவினாற் காணுவொன்றை
ஐம்புலமேவாதுள்ளே யடங்கினா மறியுமார்க்கம்
நம்பினாற் கைவிடாத நாதனுக்காட்டப்படாமல்
வம்புசெய் யகந்தையாலே வருந்தினால் வருவதுண்டோ."

"மயல்வரும் புலமையாலே வருந்தினாற் காணுவொன்றை
செயல்வரும் † பெரியோர் காணத் தெரிந்துகொண்டிருக்கு மார்க்கம்
கயில்வருங் கனியாய்க்காட்டுங் கருணைக்கேயாட்டப்படாமற்
பயில்வரு நூல்களைப் படிக்கினுந் தெரிவதுண்டோ."

† அருள்சேர் வல்ல பெரியோர்.

II.

க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ விபாக யோகத்தில் போகத்துக்குக் காரணமான தேகம் க்ஷேத்திர மென்றும் அதிலிருந்து அதை யுணர்கிறவன் க்ஷேத்திரக்ஞ னென்றும் சொன்னேமல்லவா. தேகமாகிய இந்த க்ஷேத்திரத்திலிருந்து இந்த க்ஷேத்திரத்தை யெவனறிகிறானே வென்றால்,—"சுவபாவ ஞானத்தாலாவது உபதேச ஞானத்தாலாவது பாத முதல் சிரசு வரையிலிருக்கிற அந்தந்த அவயவங்களோடு கூடியிருக்கிற சரீரம் இப்படிப்பட்டதென்று எவன் அறிகிறானோ அவன் க்ஷேத்திக்ஞனென்று க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களையறிந்தவர்கள் சொல்லுகிறார்க" ளென்று சங்கர பாஷ்யத்தில் ஆசாரிய ஸ்வாமிகள் கீதைக்கு வியாக்கியானம் செய்திருக்கிறார். சுவபாவஞான மென்றது தன் அறிவேகுருவாக அறிந்துய்யும் வழி. உபதேச ஞானமென்றது ஸ்வானுபவம் பெற்ற மேலோர் கருணைகூர்ந்து உபதேசிக்க வுணர்ந்துய்யும் வழியாம். முதல் சுவபாவ ஞானத்தால் அருள் பெற்றுய்யும் வழியைக்கூறிப் பின்னர் உபதேச ஞானத்தால் அருள் பெற்றுய்யும் வழியைக் கூறுகிறார்:—

"தமக்காக வழிகள் தோன்றிச் சாரமாட்டாத வொன்றை
இமைக்காத பொழுதினுள்ளே யெய்தி நாம் களிக்கு மார்க்கம்
மாயையைமிதித்துநின்ற வல்லவற் காட்படாமல்
சமத்தாக விதியிருந்தால் விடாதென்றூற் சார்வதுண்டோ."

"மாயையைக் கடந்தவர்க்கே வசமாகி நின்ற வொன்றை
மாயைக்கே வசமாய் நின்ற மக்கள மறியுமார்க்கம்
மாயையை மிதித்து நின்ற வல்லவற் காட்படாமல்
மாயைக்கே யடிமையாகி மயங்கினால் வருவதுண்டோ."

அகந்தை பிடித்தலையும் நம்மவர்க்கு எச்சரிப்பாய்க் கூறினது போலு முளதிப் பாடல்:—

"அகந்தை யோர் சிறிதுமில்லா அவர்க்கெளிதான வொன்றை
அகந்தையே வடிவாய் நின்ற அடிமை நாமறியுமார்க்கம்
அகந்தைவேரறுத்துநின்ற ஐயனுக் காட்படாமல்
அகந்தையில் மூழ்கி நாமென்றலைந் திட்டா லடைவ துண்டோ."

அகம்பாவத்தாலே யழிகிறோ மென்கிற நிச்சயம் மனதிற் பட்டுறுதி கொள்ளவும் "ஐயோ அந்த அகந்தை நீங்கி அறிவு தோன்றி நாமுய்வதெப்போ" என்னுந் தாபம் மேலிட்டுத் தவிக்கச் செய்யும். அந்த அத்யாத்மிக தாபத்தைப் பின்வரும் பாடல்களில் வெளியிட்டுக் காட்டி யிருக்கிறார்:—

"அகந்தையால் மதி மயங்கி ஐம்புலக் குழியில் வீழ்ந்தும்
திகம்பரற் காட்படா மற்றியங்கியே தவித்து நின்றால்
அகந்தைதான் மெல்ல மெல்ல அழிந்தழிந்தறிவு தோன்றி
மகிழ்ந்தொரு கரையிலேறும் மார்க்கந்தான் தெரிவதென்றோ."

"நானென நிற்கு மொன்றை நறுக்கென வெட்டிச் சாய்த்துத்
தானென நிற்குமொன்று தலையெடுத்துளத்தை வெளவி
மோனமாய்க் காந்த மென்ன முழுவது மிழுத்துச் சென்று
கோனெடுங் கூட்டி வைக்குங் குறியை நாம் பெறுவதென்றோ."

இப்படியத்யாத்மிக தாபத்தால் தபித்துத் தத்தளித்த உள்ளம் (மனது) துன்பம் பொறுக்காது திடீரேன்று பகிர்முகபாவனையை விட்டு அகமுகப்பட்டு அந்தர்லக்ஷியத்தில் தரித்து நிற்கும். அப்பொழுது அதன் செய்கையை இப்பாடலில் நன்குணர்த்துகிறார்:—

"கையினால் விடுக்கப்பட்ட கடுவிசையம்பு போலச்
செய்கையை விடுத்தவுள்ளந் திரும்பிப்பாராமற் சென்றே
ஐயனதடியில்நேரே ஐக்கியமாகும் வண்ணம்
தெய்விகக் குறியைநாமும் தெரிந்துகொண் டிருப்பதென்றோ."

மனது அகமுகப்பட்டு அந்தர்லக்ஷியத்தில் நிற்கும் பொழுது பழைய வழக்கங்களாலேற்பட்ட வாசனைமிகுதியால் அது பகிர்முகப் படுவதற்கேதுவான அனேக இடையூறுகள் (அகத்தனவாகவும் புறத்தனவாகவும்) ஏற்படும். அப்பொழுது யோகியானவன் வைராக்கியம் விவேகம் என்னும் இரண்டு சாதனங்களால் இராகத்துவேஷாதிரூபமான அவ்விக்னங்களை நீக்கி அகமுகத்தில் அந்தர்லக்ஷியம்கலையாது மனதை வெளிப்படுந்தோறும் திருப்பித்திருப்பி யதில்தரிக்கச்செய்து நிறுத்தல்வேண்டும். அப்படி நிறுத்தப்பயின்ற தீர புருஷனுக்கு (தாரணை பலித்தவனுக்கு) "யோகத்துக்கு யோகமேகுரு" என்றபடி அனுபவம் ஏறஏற மேன்மேலும் சன்மார்க்கத்திற் செல்லும் வழிதோன்றும். அந்த அவஸ்தையி லுண்டாமனுபவத்தை யிவர் நன்கு கூறியிருக்கிறார்:—

"எம்மைநீர் விடுதிர்போலும் யாங்களென் செய்வோமென்றே
நம்மிருகாலைப்பற்றி ஞாலத்திலிழுக்கும் வ்ருத்தி
தம்மைவைராக்யம்ஞான மெனுமிரு சரணத்தாலும்
செம்மையாயுதைத்துவீழ்த்திப் பறந்துநாம்செல்வதென்றோ."

"நாமாகவழிகள்தேடியிடர்ப்பட்டநாள்போதாதோ
போமாறுகாட்டிச் செல்லும் போதமாங் குறியைப்பெற்றே
நாமாகவொன்றுஞ் செய்யாததன்பின்னே நடந்து போய்ப்போய்
ஓமாகுமின்பவீட்டி லொடுங்கியே யுறைவதென்றோ."

பிரம்மபுரியென்னும் இத்தேகத்தின் ஒன்பது வாசலுமடைத்து, உந்திவாசலை யுள்ளேதிறந்துட்புகுந்து "மேலைவாசலை"முட்டி அவ்வாசலும் திறக்கப்பெற்றால் அப்புறம் எல்லாம் பூரணமாம். வேலைமுடிந்து 'கிருதகிருத்தியர்க' ளாவோம்—செய்யவேண்டியதைச் செய்தவர்களாவோம். "உடம்பினைப்பெற்றதனாலானபயனெல்லாம்" பெற்றோராவோம். உந்திவாசல்திறந்து மேல்வாசல் திறக்கும்வரையில் இளைப்பும் களைப்பு மடிக்கடிதோன்றும். அதற்கு ஆற்றாது விட்டுவிட்டு முயற்சித்தால் மேல்வாசல் எளிதில் திறவாது: பட்டபாடுகளெல்லாம் பயனின்றிப்போகும். ஆகையால் யோகியானவன் அதிதீரனாய்த் திடசித்தத்தோடு சற்றும் இளைக்காது மேற்செல்லல்வேண்டும். சுழிமுனையில் நேருமிந்த அனுபவம் மனதையடக்கும் வழியறிந்தப்பியசிக்கும் யோகியர்க்கன்றி மற்றவர்க்கு எவ்வாற்றானும் விளங்க வைப்பதரிதாம். சுழிமுனைவாசல் திறந்ததும் யோகி மௌனிவிருதம் மேற்கொண்டு மனதை பகிர்முகத்தில் திரும்பவிடாமல் அகமுகப்படுத்தினபடியே அந்தர்லக்ஷியத்தில் நிறுத்தி தாரணைவிதிப்படி கிரமக்கிரமமாக அதிதீரனாயிருந்து தீவிரதரபக்குவனாய் யோகத்தின் லக்ஷியத்தையே பற்றிப்பற்றி மேலேறக்கடவன்; "சத்திக்குவித்துத் தனதுபசாந்தமே" யென்னும் திருமந்திரத்தை மனதில்வைக்கக்கடவன்.

"எட்டியெட்டிப்பார்ப்பார்க் கெட்டிடாதேய்க்கு மொன்றை
சுட்டிக்காணாமற்காணும் ஸூக்ஷ்மமாங்குறியைப் பெற்றே
எட்டிடாப்பொருள் தானாகக்கிட்டுமோ ரிருக்குமார்க்கம்
முட்டிடாதாறியாறி முடிவைநாம் காண்பதென்றோ."

"சொல்லாமல் மௌனிதந்த சொரூபமேலக்ஷ்யமாகி
இல்லாதமாயைதந்த இன்பமே யலக்ஷ்யமாகி
எல்லாமுமலக்ஷ்யமாகி யிறுமாந்து நின்றவுள்ளம்
கல்லாகிக் கனியுமாகிக் களியாமற் களிப்பதென்றோ."

மனதை அகமுகப்படுத்து முபாயத்தையும் இவர் முன்னரே சொல்லியிருக்கிறார். அந்த உபாயமறியாதார் அறியுமாறு அதையும் விரிவஞ்சாது கீழேவரைகிறோம்:—

"உள்ளாக நின்றவொன்றை யுணர்கலா தோடியோடிப்
பள்ளங்கண்டோடும்நீர்போற் புறம்பெலாம்பாயும்நெஞ்சம்
தள்ளாத மௌனபோதப் பலகையாற்றடுக்கப்பட்டே
யுள்ளாக வோடிப்பாயு மொருவழி யுணர்வதென்றோ."

மனது அகமுகப்பட்டு ஆழிநின்றால் சித்தர்கள் தரிசனமும் அவர்கள் சகவாசமும் கிடைக்கும். சித்தர்கணங்களோடு சேர்ந்து சித்தர்களுக்கெல்லாம் சித்தனாமீசனைத் தெரிசிக்கத்திரிந்தாலும் அவனை யுள்ளபடி கண்டுகளித்தல் அரிதாம். ஏனெனில்,—

"தானன்றி யொன்றிலா அச்சச்சிதாநந்தமூர்த்திக்
கூனுண்டோ வுயிர்தானுண்டோ உளமுண்டோ வுணர்வுமுண்டோ
தானென்பதற்றாருள்ளந் தனதுளமாகக்கொள்வான்
தானென்பதற்றார் மேனி தனதுடலாகச் சார்வான்."

"படியெலாம் வானமெல்லாம் படிவமாய் நின்றவீசன்
அடியராயழைக்கின்றார்கட்கருண்மழைபொழியவேண்டின்
மடியினாற்பசுத்தன்பாலை வழங்கல்போற்றனையிழந்த
அடியர்தம்முடம்பையன்றி யவற்கொருவழியுமுண்டோ."

"அடியர் தம்முடம்பையன்றி யவற்கொருவழியுமுண்டோ" வென்றதனால், "அடியர் தம்முடம்பு" நம்முடம்பைப்போல்தானே காலும் கையும் மூக்கும்வாயுமா யிருக்கிறதென்று மயங்கிப்போகாத வண்ணம் எச்சரிக்கிறார்:—

"அடியொடு முடியில்லாத ஆனந்தமன்றிவேறு
வடிவிலா வொருவன்கொண்ட வடிவெலாம் தனையிழந்த
அடியவர் வடிவேயென்றால் அவன் வடிவினைநம்போன்ற
வடிவமாய் மயங்கிவிட்டால் நமக்கொரு வழியுமுண்டோ."

சித்தர்கணங்களின் கூட்டுறவுபெற்றும் 'சித்தனை'ப் பித்தனென்றெண்ணி மயங்கி மோசம்போகாதபடி பின்வரும் பாடலினால் நம்மை உஷார்ப்படுத்துகிறார்:—

"சித்தனா மீசன்றன்னைத் தெரிசிக்கத் திரிகின்றோமே
சித்தன்றான் வந்துநின்றால் திடுக்கிட்டு விழிக்கின்றோமே
சித்தன்றான் நமக்கெல்லாமும் பித்தனாய் முடிவனானால்
சித்தனைக் காண்பதுண்டோ திருவருள் பெறுவதுண்டோ."

III

ஆசாபாசமென்னு மிரண்டினால் கட்டுண்டுழலும் ஜீவனைக் காப்பாற்ற வழி யொன்றேயுண்டு. "ஆசையறுமின் ஆசையறுமின், ஈசனோடாயினு மாசையறுமின்" என்னும் திருமந்திரத்தைக் கைப்பிடித்து சுவபாவஞானத்தால் தன்னறிவேகுருவாகக்கொண்டு ஆசையறுத்துப்பாசம்நீங்கி, மோசம்போகாமல்நாசந்தீர்த்துய்வது ஒருவழி. ஈசனிடத்தில் மட்டும் ஆசைவைத்து மற்ற ஆசைகளெல்லாம் விட்டு "பற்றற்றான் தன்னைப்பற்றி" சகுணோபாசனையால் மூர்த்தி தரிசனம்பெற்று தியேயப்பிரம்மமாகி அந்தநிலையிலிருந்து அனுவபம் முதிரமுதிரத் தூங்குகிறவன்கைப்புஷ்பம்போல் அதுவும் நழுவிப்போக நிர்க்குணப் பிரம்மமாகி தன்னைத்தானறிந்து தன்னிலைகெடாது தனியிருந்துய்வது இன்னொருவழியாம். முதல்வழி அதிதீவிரதர பக்குவர்களுக்கே யெளிதில் கைகூடி வருவதாகும். மற்றவர்கள் பின்வழிபற்றியே பிழைத்தல் முறையாம். ஆசாபாசங்களுக்குட்பட்டு இராகத்துவேஷங்களால் துன்புறு மனிதன் சகுணோபாசனைசெய்தே அருள்பெற்றுய்யல்வேண்டும். (மனம்தூய்ந்து தெளிய வேண்டும்.)

இந்த ஆசைப்பேய்பிடித்தலையும் நாம் இப்பிசாசினால் படும் அவஸ்தையை வெகு நன்றாய்ச் சொல்லியிருக்கிறார். அதை யாவரும் உள்ளபடி யாய்ந்துணர்ந்து சிந்தித்து மனதில் வைக்கவேண்டும்:—

"ஆசைப்பேய் பிடித்திட்டாட்ட அறிவழிந்திருத்தலாலே
ஆசைப்பே யோட்டவந்த அவனை நாமறியமாட்டோம்
ஆசைக்கும் பயம் லஜ்ஜைக்கு மகப்பட்டு விழிக்கின்றார்கட்
காசைக்கும் பயம் லஜ்ஜைக்கு மகப்படா னகப்படானே."

"பயமொடு லஜ்ஜையென்னும் பழந்தின்றுவளர்ந்த நம்முன்
பயமொடு லஜ்ஜைவேரைப் பறிப்பவன் வந்துநின்றால்
பயமொடு லஜ்ஜையெல்லாம் நடுவிலே படுத்துக்கொண்டு
தயவொடுவந்தான் றன்னைச் சாராமற்றடுக்கு மந்தோ."

மாயாவிருக்ஷத்துக்கு மூலவேராயுள்ளது ஆசாரூபமான மனம். இந்த ஆசாரூப மனத்திலிருந்து பற்றுதல் என்னும் பாசம் எங்கும் படர்ந்து சல்லிவேரோடிக்கிடக்கிறது. இந்த சல்லிவேரிலொன்றிருந்தாலும், சுவற்றின் சந்தில் முளைத்த ஆலஞ்செடி என்னபிடிங்கியும் மறுபடியும் கிளைப்பதுபோல, அது படர்ந்தோடி மாயாவிருக்ஷத்தை முளைக்கச்செய்யும். இந்தப் பாசவேரை யடியோடு பறிக்கும்சக்தி ஈசன் ஒருவனுக்கேயுண்டு. ஞானத்தீபட்டு அம்மரம் அடியோடு நாசமாகுதலுண்டு. அல்லது ஈசனருளால் அது அடியோடும் நீங்குதலுண்டு. "பற்றற்றார்பற்றாகப் பற்றிநிற்குமவன்" பாசவேரறுத்துப் பழம்புண்ணாற்றிப் பரம்பெருங் கருணையாலாளவந்தால் அவனைக்கண்டு "நாம் வெருவலாமோ" என்கிறார்.

"பாசவேருளத்திலோடிப் பாய்ந்ததற் களவொன்றில்லை
பாசவேர்ச் சல்லியொன்று பறிபடாதிருந்திட்டாலும்
பாசமே முழுதுங்காட்டிப் பரம்பொருள் காட்டாதந்தோ
பாசவேர் பறிக்கின்றானைப் பார்த்துநாம் வெருவலாமோ."

"பெருவியப்பு அழுகைகாமம் பெருமித மிழிபுகோபம்
வெருவுதல் களித்தலென்ற விகாரமாம் புண்களெட்டைப்

புரைகொள மூடிமூடிப் புதைக்கின்றோம் வெளிப்பட்டோடக்
கருவியிட்டாற்றவனைக் கண்டுநாம் வெருவலாமோ."

கருணாநிதியாகிய ஈசனைவிட்டால் நமக்கு வேறுபுகலிடமுண்டோ வென்பதை வெகு அழகாகச் சொல்கிறார் :—

"கருணையாலுடம்புமாகிக் கருணையாலுயிருமாகிக்
கருணையாலசைந்துலாவுங் கருணைக்கே யாட்படாமல்
வெருவினாற் போவதெங்கே வெய்யதாம் மாயைக்கெல்லாம்
ஒருவனை யாட்படாமல் ஓடவுங் கூடுங்கொல்லோ."

கருணாமூர்த்தியாம் ஈசன்திருவடிநிழலைவிட்டு நீங்கினால் விருப்பு வெறுப்பென்னும் இராகத்துவேஷாதி ஆசாபாசப்படைகள் யமதூதர்கள்போல் வந்து தாக்குமேயென்று அஞ்சியோதும் அபயக்குரல் கிஞ்சிஞர்மனதை நடுங்கச்செய்வதா யிருக்கிறது :—

"உலகெலா மிதித்துநின்ற ஒருவனுக்காட்படாமல்
விலகினால் விடுப்பதெங்கே விருப்பெனும் வீரர்தோன்றி
உலகெலாம் பிடித்துத்தள்ளி யூர்க்கெலா மடிமையாக்கிப்
பலமெலாங் காட்டுவாரே பதுங்கவோரிடமுமுண்டோ."

ஸத்குரு கிருபாநோக்கம்பெற்ற சிஷன் வெருவியோடினாலும் அவர் விடுகிறதில்லை. ஈசன் திருவருள்பெற்றவர் அவரை மறந்துபோவோமென்றாலும் அவர் விடுகிறதில்லை. "அரசன் அன்றுகொல்லும், தெய்வம் நின்றுகொல்லும்" என்பது உலகத்தார்க்குரிய பழமொழி. அருள்பெற்ற அன்பர்க்கு ஐயன்செய்யுங்காவல் கண்ணை யிமைகாப்பதுபோலாம். இந்த அநுபவத்தை அருள்பெற்றாரே யறியவல்லர். இமையளவு நெறிதப்பினாலும் என் ஐயன் 'இதோவந்தேன்' என்று வந்துவிடுவான் திருத்தி. அவன் அன்பைநினைக்க நைந்துருகாக் கல்நெஞ்சருமுண்டோ வுலகில்? அன்பென்றால் அதுவேயன்பு. அவனன்பை யுணர்ந்தார்க்கு அதுவொழிந்த வெல்லாம் துன்பே! இதைக் கேட்டுணர்ந்து நெஞ்சுருகா திருக்கக் கூடுமேல் இருந்து பார்மின்! அகலிகையைப்போல் கல்லாகச்சாபம் பெற்றாரன்றி மற்றவர் கரைந்துருகா திருத்தல் அசாத்தியமே. மனதையிழுத்து நிறுத்தி யிதை வாசித்துய்மின்!

"கருகிப்போம் பயிருக்கேடுங்காளமேகம்போலன்பு
பெருகிப்போய் நம்பால் வந்த பெரியவற் காட்படாமல்
வெருவிப்போய் மாயைக்காளாய் விழிப்பதை யெண்ணவெண்ண
உருகிப்போயுள்ளநெஞ்சும் ஓழுகிப் போகின்றதையோ."

ஆட்பட்டஅன்பன்நிலையிப்படியானால் அவன் "காதல்நிலையறிந்து" தானே காதலனைப் வந்தாண்ட ஐயன் தொழில் என்னோவெனில், அதையுங் கேண்மின்! கேட்ட பின்னும் அவனை நினைந்து கனிந்து சிந்தையுருகா திருக்க சாத்தியமாயின் இருமின்! இல்லையேல் அவனடி பணிமின்! தொழுமின்! ஏற்றுமின்! போற்றுமின்! அவன்வழிபற்றுமின்!

"இப்படியோடினாலு மென்னையன் விடுகின்றானோ
சொற்படிகேளாப்பிள்ளை துறக்கின்றதாய்தானுண்டோ
எப்படியானுந் தன்னை தின்னருள் புகட்டுகின்றான்
அப்படியானவையன அருளொடும்வாழிவாழி."

"குழந்தைதானோடிபோடிக்குழியினில்விழவிழ
எழுந்தெழுந்தெடுக்குமன்னையிவற்கிணையில்லையில்லை
மழுங்கிடுமறிவினாலேமாயையாங்குழியில்வீழ்ந்து
புழுங்கிடுமக்கட்கெல்லாம்போதப்பால்புகட்டிமீட்பான்."

இப்படித் தாயோடு தந்தையும் ஆன அப்பனை உலகினரோம்புகின்ற அப்பனோ டொப்பிட்டோதின்,—

"பெருகியமுறையினாலே பெரியதாங் கல்வியெல்லாம்
தருகிறதந்தைதானுஞ்சரியிவற்கில்லையில்லை
ஒருமொழியுரைப்பானெல்லாமுணர்ந்துகொண்டிருக்கவைப்பான்
ஒருமொழியுணர்ந்தாற்பின்னர்மறுமொழியுலகினுண்டோ."

என்னப்பன்செப்பும் ஒருமொழியுபதேசத்தின் மகிமை யிப்படியாக, அவனை யுடன் பிறந்தாரோ டொப்பிட்டுப் பார்க்கலா மெனிலோ, அந்தோ! அவர்கள் சகோதரவாஞ் சைக்கும் இவனன்புக்கும் எவ்வளவுதூரம்!

"ஒருமையாய்த் தீங்குவந்தா லாதரித்துதவுகின்ற
ஒருவயிற்றுடன்பிறந்தா ரவன்றனை யொவ்வாரொவ்வார்
ஒருபொழுதேனும் நம்மைப் பிரிகிலாதுடனுய் நிற்பான்
உரிய தன் பொருள்களெல்லாம் நமக்கெனவுவந்துவைப்பான்."

சகோதரவாஞ்சையுஞ் சின்னதாயிற்றே, அன்பொடின்புங்கலந்துதரும் முயிர்த்துணை யாமுண்மையான மனைவியோ டொப்பிட்டுப் பார்ப்போ மென்றால், அவளும் அவருக்கு இணையில்லை :—

"பெருமையாய்ப்பிள்ளைபெற்றுற்பிரிகின்றபனைவி, யார்க்குந்
தெரிகிலாதுள்ளேநின்ற குருநாதற்கிணையோவில்லை;
உரிமையா முள்ளந்தன்னை யொருபோதும் பிரிந்து நில்லான்
அருமையா மின்பந்தன்னை யயராமற் பொழிந்து நிற்பான்."

இவர்களெல்லாம் போகட்டும். இகபரசாதகமாயிருந்து நம்மைக் கரையேற்ற வல்லவ ரென்று கனிந்துவளர்த்த அருந்தவ மைந்தர்க் கொப்பிட்டுப் பார்ப்போ மென்றால்,—

"உயி ரொழிந்தோடிப் போனவுடம்பினை யெரியப் பண்ணி
வயிறெரிந் தழுங்குமைந்த ரிவற்க்கிணை வாரார் வாரார்
உயிருளபோதே யூனோடொட்டாமல் வாழப்பண்ணித்
தயிரியமாகத்தானே சாகாமற்சாகச்செய்வான்."

இப்படி யுற்றார் உறமுறையாரெல்லாம் இணையில்லாராக, "தன்னோடொத்த கேளிரி ரில்லை" யென்றிருப்பதால் நம்மோடவனை யொப்பிட்டுப் பார்ப்போ மெனிலோ, அப்பவும் அவனேமேல். எப்படி யெனில் :—

"நம்மையே கெடுத்துக் கொள்வோம் பிறர்சொலும் நயமுங்கேளோம்
எம்மையே யேய்க்கின்றாரென் றிகழ்ந்துபோ யிடரில் வீழ்வோம்
நம்மையே வலியவாண்டு நமதுளங்குடிபுகுந்து
நன்மையேகாட்டிநிற்பான் நம்மினும் நல்லனன்றே."

இப்படி உயிர்க்குயிராயிருந்து அன்பிலன்பாயும் இன்பிலின்பாயும்உள்ளிருந்துதவும் உத்தமன் "உலகெலாமறிந்தோதற்கரியவ"னாயினும், அடியாருள்ளமே குடியாகக்கொண்டு ஆடிப்பாடியயர்ந்து தேடினார்க்கருளிய தயாநிதியாக நிற்பானென்கிற உண்மையை உள்ள படிசொல்லுகிறார் :—

"வாடிடும் மனத்தில் நிற்பான் வளமெலாம் பொழிந்து நிற்பான்
தேடுமுணர்வில் நிற்பான் நமையெலாந்திருப்பி நிற்பான்
பாடிடும் வாக்கில் நிற்பான் பார்க்கின்றூர்வாழப் பார்மேல்
ஓடியே நிற்பான் நாம்தாமடிமையாங் குடிகளன்றோ.

IV

ஸர்வசாக்ஷியாகியும் ஸர்வசுதந்தரனுகியும் "பக்திவலையிற்பட்டோனுகிய" ஈசன் தனக்கருட்குழவியானேரிடத்துள்ளும் புறமுமொன்றாக நிறைந்துதாக்கும் மர்மத்தைச்சொல்கிறூர் சுவையுறக்கேண்மின்!

"உள்ளொடு புறம்புமாகி யொவ்வொன்றுமறிந்துநிற்பான்
கள்ளந்தான் கண்டிட்டாலுங் கருணையே பொழிந்துநிற்பான்
எள்ளள வெண்ணினுலு மின்பமா யூறிநிற்பான்
தள்ளினும்போகாணையன் தண்ணருள்வெள்ளமன்றோ."

அவன் அருளின் மகிமைதானெப்படிப் பட்டதென்றால் :—

"அன்னவனருளையெல்லையிடுபவராரோ ஐயன்
தன்னருள் வெள்ளமெல்லாந் தடுப்பவ ரொருவருண்டோ
அன்னவன் செய்கையெல்லா மடியர்க்கா யன்றியொன்றும்
அன்னவற் கில்லையென்ற லவனருளருமையென்னே."

"மொழியாலும் மோனத்தாலும் செபலாலும் செய்தியாலும்
விழியாலும் பார்வையாலும் விளையாடலாலும்காட்டும்
வழியாலும் வடிவத்தாலும்மனநினைவாலும் ஐயன்
பொழிகின்ற னடியார்க்கெல்லாம் போதமாம்கருணைமாரி."

எங்கும் நிறைந்த பரிபூரணமான ஈசன் இப்படிக் கருணைமாரிபொழிய, நம்மிடத்தில் வலுவிலே வந்த பாக்கியத்தைத் தள்ளிச் சலுகைக்கலைதல் சரியாமோ! ஆதலால், எல்லோரும் அவனைவழிபட்டு அவனேயாவோம்வாரீர் என்று வருந்தியழைக்கிறூர்:—

"ஐயன்றானிவ்வாறெல்லாம் அருண்மழை பொழிந்துநின்றும்
மையலால் வாடிநின்றல் வளர்வதோர் வழியுமுண்டோ
ஐயன்பாலன்புகொண்டே அருண்மழை யேற்றுக்கொண்டே
ஐயனுயாவோம்வாரீர் ஆனந்தமாவோம்வாரீர்."

அவனை வழிபட்டு அவனேயாகவேண்டிய நிமித்த மென்னேவெனில் :—

"அன்னவன் நிலைமையெல்லாம் அவனுகிக் காண்பதல்லால்
இந்நின்ற நிலையிற்காண எட்டுமோ எட்டாதன்றே
அன்னவனடியிற்சென்றே அவன்சொலும்வழியில்நின்றே
அன்னவனுவோம்வாரீர் ஆனந்தமாவோம்வாரீர்"

அவனையறிந்து அவனுலன்றி அகம்விண்டு தன்னையறிந்து தானுவதில்லையால், அதையுஞ் சொல்லி, உண்மையைக் காண்பதுவுமவனுலேயே யென்று வற்புறுத்திக் கூறி வருந்தியழைக்கிறூர் :—

"என்னதான்பாவித்தாலும் இந்தவோரகந்தைமாண்டு
தன்மைமுன்னிலையில்லாத தன்மயங்காணேமந்தோ
தன்மயந்தானுய்த்தாக்குந் தன்மைதான் காட்டவல்லான்
றன்னைநாம்காண்போம்வாரீர் தன்மயங்காண்போம்வாரீர்."

"சுருதியால் யுக்திதம்மாற் சொருபத்தைத் துணிந்திட்டாலும்
உறுதிதான் கண்டதுண்டோ அகந்தைதானொழிந்ததுண்டோ
அறுதியாமனுபவத்தை யமிர்தமாய்க் காட்டவல்லான்
உறுதியாயவனைக்காண்போ முண்மையேகாண்போம்வாரீர்."

சங்கற்போற்பத்திஸ்தானமும் சங்கற்பநாசஸ்தானமும் தானேயாகி ஏகமாய் விளங்கும் அண்ணலைத் துரியநிலையிலிருந்து துரியஸ்தானத்தில் கண்டுய்வோம் வாரீரென்று பின்னுமழைத்து, சங்கற்பநாசஞ்செய்து கருத்தற நிற்பதின் கஷ்டத்தைத் அனுபவத்தி லிருந்து கூறி யழைக்கிறார்:—

"எண்ணத்தால்வேறுபட்டவ்வெண்ணத்திலகந்தைகொண்டோம்
[1] எண்ணத்தையிழந்தோமில்லை [2] எண்ணத்தை யடைந்தோமில்லை
எண்ணந்தான்பிறந்திறக்குமிடமாகியெல்லார்க்கொன்றும்
அண்ணலைக்காண்போம்வாரீர் அவன்மயங்காண்போம்வாரீர்."

"கண்மூடிநிற்பாம் கருத்தினை மூடச்சென்றால்
விண்ணோடுமண்ணையெல்லாம் வேரொடுபறிக்குமந்தோ
எண்ணமலொன்றும் சும்மா இருத்திடும் சூக்ஷமங்கற்றான்
கண்ணாரஅவனைக்காண்போம் கருத்தறக்கற்போம் வாரீர்."

இப்படி யழைத்தழைத்தும் "வருந்தியழைத்தாலும் வாராதனவாரா" என்பதை யுன்னினார்போலும், பின்னுமேசிப்பேசிச் சுரணைவரச் செய்யல்வேண்டுமென்று கருதினார்போலும், அவன்வழிபற்றத் தன்னுடன் வாராத மாந்தர்தம் வாழ்க்கையையும், ஆக்கையையும், அவர் உள்ளம், அன்பு, பிறவியெல்லாவற்றையும் பழித்துப் பேசிப் பாடியிருக்கிறார். அதிலிரண்டு மூன்றைமட்டு மெடுத்துரைக்கவே இங்கிடம்பெறும்.

"தீயதாமகந்தையாலே திரிந்திடு முள்ளமாறிப்
போய்அதூயொடுங்குமாறு புகன்றிடுகின்றஆசான்
தூயவாய்மொழிகள்கேட்டுச் சொருபத்திலாழ்ந்து, பேச
வாயெழாமௌனங்காணு வாழ்க்கையோர்வாழ்க்கையாமோ."

"அருள்பொழி விழியுமெண்ணி அன்பான மொழியுமெண்ணி
ஒருசிறிதேனுங்காணுதுளம்புகுந்ததுவுமெண்ணி
குருவுருவாகிவந்த கோலமுமெண்ணி யெண்ணி
உருகிடமாட்டாக்கல்லாமுள்ளமோருள்ளமாமோ."

"ஆசாபிசாசையோட்டிஆராதவமிர்தமூட்டி
மாசானகுணத்தைவிட்டு மதியெலாம் பொழியக்காட்டும்
ஆசானுக்கடிமையாகி அவன்சொலும் வழியிற்போகிப்
பேசாதவிடத்தைக்காணுப் பிறவியோர் பிறவியாமோ."

இவ்வளவும் ஆசான் அருள்பெற்று அவர் ஆசிவசனத்தோடும் வெளியிட்டு முடித்தபின், இதையெல்லாம் செய்வித்த "ஆசான்திருவருளை" வியந்துகூறியிருக்கும் வெண்பா எல்லாவற்றிலும் மேலாகவும் உண்மையாகவும் அனுபவ பூர்வகமாகவுமிருக்கின்றது. அருள் புரிய வல்ல ஆசான் பெருமையை யாரே புகழவல்லார்!

"தன்னைநினைவித்தான் தானேயுளம்புகுந்தான்
என்னைப்பாமாலையிசைப்பித்தான்—தன்னடிக்கே
அள்ளியேசூட்டுவித்தான் ஆசான் திருவருளை
உள்ளவேஉள்ளமுருகும்."

(1) பேதபாவமாம் எண்ணத்தை. (2) அபேதபாவமாம் எண்ணத்தை.

'ஆசாபாசம்,'—'இராகத்துவேஷம்,' என்னுமிவைகளை பெத்தாத்மனாகிய ஜீவனும் மனிதனது உருவத்துக்குள்ள இரண்டு துருவமுனைகளாகச் சொன்னோம். ஆசைஇல்லாவிட்டால் பாசமில்லை; பாசமில்லாவிட்டால் ஆசையில்லை. இராகமில்லாவிட்டால் துவேஷமில்லை; துவேஷமில்லாவிட்டால் இராகமில்லை. அதாவது, விருப்பு வெறுப்புக்கள் எப்போதும் ஒன்றையொன்றுபற்றியே நிற்கும். இவற்றில் ஒன்று அறவழிந்தால் மற்றது இருக்கவிடமின்றி அற்றுப்போகும். ஆசையை ஒரு மதயானைக்கு ஒப்பிட்டு "அது தேகமென்னும் பெருங்காட்டிற் றிரளாஞ்செருக்கு மிகச்செய்யும்" கோபமும் மதமுமுள்ள "இந்திரியமாம் வெங்கன்றுகளை யுடைத்தாகும்"—என்றும்; அது "இதயமென்னுங் காட்டுறையும்" இருவினைகளாகிய இரண்டுகொம்புகள் உளது என்றும்; அது "பலவாதனையாம் மதஞ்சொரியும்"; எப்பொழுது மெவ்விடத்திலும் பரவுகின்ற உருவத்தை யுடையதாய் 'பிறவிநோக்கங்கள்'. மிகுந்த அகங்காரமென்னும் போர்க்களத்தில் வசிக்குமென்றும்,—இவ்விச்சையென்னும் மதயானை "வெற்றித்திறமும் தோல்விகளு மேன்மேல் நல்கி" "தீனர்களாஞ் சீவத்திரளைச் சங்கரிக்கும்" ஆதலால், தைரியமென்கின்ற அடபினால் ஆசையென்னு மிந்த மதயானையை, அச்சமில்லாமல் "எல்லாவகையாலும் யோகி வெல்வதுத்தமமாம்."—என்று வசிஷ்டர் சொல்லியிருக்கிறார். "இச்சையே பெந்தம் அதன் நிவர்த்தியே முத்தி."

"எனதீதென்னு மறிவுதனை யிடர்கற்பனையென் றுரைசெய்வார்
கனமாமறிவின் பாவனையாற் காண்பதெல்லாங் கையகலி
லனகாதிபமீன கற்பனைகள் அற்றதென்று ருயர்நல்லோர்
மனமாநினைவே சங்கற்பம்மனத்தி னினைவற்றது சிவமே."—ஞானவாசிஷ்டம்.

ஈதெனதென்கின்ற அறிவைத் துன்பம்பொருந்திய கற்பனையென்று சத்துக்கள் உரைசெய்வார்கள். வியாபகஞானபாவனையினாற் காணப்பட்ட சகலமும் நீங்கினால், களங்கமற்ற ராசனே, மேலாகிய சத்துக்கள் கற்பனைகள் நசித்ததென்று சொன்னார்கள். மனோபாவனையே சங்கற்பமாகும்; மனதினது பாவனையற்றாலதுவே சிவமாகும்—என்று ஸ்ரீராமருக்கு வசிஷ்டபகவான் சங்கற்பநாச விசேஷத்தால் ஆசையறுக்கும் வழியோதினார்.

ஓ0த்தஸத்.

# The Meeting after Parting or "The Reunion of Love."

"For Love is but the heart's immortal thirst,
To be completely known and all forgiven,
Even as sinful souls that come to heaven.
So take me, Love and understand my worst,
And pardon it, for love, because confessed.
And let me find in thee my love, the best."—*Henry Van Dyke.*

"We should be like a rubber ball in all the circumstances of life. The harder it is hit, the more it bounds. The harder we fall, the higher we should rise."—A New Thought Pupil in *Now*.

"If we each spoke the desire of our heart, it would be to find the Self. We begin the search for the Infinite as soon as we are born. Sooner or later we learn that we can find nothing but that which is within ourselves, Searching the ends of the earth for possessions, what we may find, we soon learn we had always possessed. A Norse legend tells of a man who was pursued by misfortune. His crops were destroyed, his children died, he was attacked by enemies, he became ill. One day, thinking, he saw the troll that did it, he caught him and they wrestled, and when he mastered it and saw its face, it was his own. He had been seeking cause outside of himself instead of within. Each must some time stand face to face with his own Being.

"This great New Thought work begins with the individual. He is the beginning of a race. Would I work for the betterment of the race, I must begin with myself. As I grow wise and strong, I may reach out and help others. I am to let my light shine."—*Raymond* in NOW.

## "பிரிந்தவர் கூடினாற் பேசவும் வேண்டுமோ!"

"அழுந்தொறு மணைக்கு மன்னை அறிவிலா தோடியோடி
விழுந்தொறு மெடுக்குமப்பன் விளையாடும் பொழுதிற்றோழன்
தொழுந்தொறுங் காக்குந்தெய்வம் சொந்தமா யெடுப்பார்க்கெல்லாம்
குழந்தையிப்படி யுலாவும் குருநாதன் வாழி வாழி."—திருவருட்கைவல்யம்.

செநநபாபுரியில் ஒரு அற்புதம் நடந்தது. அதை விண்ணவரும் மண்ணவரும் கண்டு வியந்தார்கள். ஸ்வர்ணமாபுரியில் மின்னற்கொடிபோன்ற மௌனசுந்தரி யென்றொரு தபஸ்வினி வெகு காலமாகத் தபசு செய்துகொண்டிருந்தாள். அவள் தபசு முதிர்ந்து பலிக்குங்காலத்தில் தபோ மகிமையாலுண்டான கர்வம் மேலிட, நியேயப்ரம்ம ரூபமாய் வந்துநின்ற ஈசுவரனை மதிக்காமல் தன் தபோமகிமையை நினைத்து தனக்குள் கர்வங் கொண்டு தன்னையே நினைத்து அகந்தை மேலிட்டிருந்தாள். அப்பொழுது அவளுக்கு வரப் பிரசாதமளிக்கவந்த ஈசுவரன் அவள் கவனத்தைக் கவரச்செய்த முயற்சியெல்லாம் அவளுடைய அகங்காரவிர்த்தியில் பலிக்காமற் போகவே, ஈசுவரன் முகூர்த்த காலம் காத்திருந்து பின்னும் அவள் அகங்காரவிர்த்தி தீராமையால், "என்னை வருந்தியழைத்தும் நான் வந்துள்ளளவில் என்னைமறந்துன்னையே நினைத்துத் தியங்கி நிற்கின்றமையால் நீ மண்ணுலகில் சென்று மக்கள் வயிற்றிற் பெண்ணாய்ப் பிறந்து தன்னலந்தெரியாது தியங்கி கர்வத்தால் வரும் கஷ்டங்களை யனுபவித்து இருதயசுத்தி யடைந்தபின் என்னை நினைத்து மனநைந்துருகி வருந்துங்கால் எனது தரிசனம் உனக்குக் கிடைக்கக் கடவது" என்று அசரீரியாயிருந்து கூறி அந்தர்த்தானமாயினர். அசரீரிவாக்கு உள்ளத்திலுரைக்க அம்மின்கொடியாள் "ஓஹோ! என்ன காரியம் செய்தோம்! எவ்வளவோ ஐம்புலன்களை யடக்கித் தபசிருந்தும் இந்த அகங்காரவிர்த்தியை யடக்கி யாளத்தெரியாமல் மோசம் போனோமே யென்று வருந்தி யழுதாள். அவளுக்கு ஸ்வப்பிரக்ஞை வரவும் அசரீரிவாக்குப்படி அவள் கருப்பாசயத்தில் கருவுருக்கொண்டு பவசாகரத்தினடியில் உள்ள முத்துப்போல் அவள் தேஜோமய ரூபம் மாறி பஞ்சகோசங்கள் பூண்ட பெண்மணி யுருக்கொள்வாளாயினள். இந்தக் குழந்தை ஒரு அந்தணர் குலத்தில் அருமையான மகவாய்ப் பிறந்து வளர்ந்து வரு நாளில், இவளுக்கு விவாக காலம் கிட்டியது. கொடைக ளெல்லாவற்றிலும் ஒப்புயர்வில்லா உச்சிதக் கொடை, தன்னையே உடல் பொருளாவியு மொன்றாச் சேர்த்து சத்குருவுக்கு அர்ப்பணம் செய்வதாம். இப்படி தன்னைக் கொடுக்கவல்லார்க்கு ஈசுவரன் தன்னையே கொடுத்து தனது ஸ்வரூபமாக்கி ஆத்மானந்த பூர்த்தி யுண்டாக அனுக்ரகம் செய்கிறார். இதற்கு அடுத்த படியிலுள்ளது, தான் அருமையாய்ப் பெற்றெடுத்து வளர்த்த அருந்தவப் புதல்வியை பாத்திரமறிந்து சத்குண சம்பந்நனை பிரம்மசாரிக்கு உடல் பொருள் ஆவியும் சேர ஒன்றாய்க் கன்னிகாதானம் செய்துகொடுப்பதாம். இந்தக் கன்னிகாதானம் எவனொருவன் ஹிருதய பூர்வகமாக விஷயபப்பற்றின்றி ஆத்மபூரணமாக அறிந்து செய்கிறானோ அவனுக்கு ஸ்வர்க்கலோக ஸம்பத்துக்களெல்லாம் உடனே கிடைக்கின்றன வென்று பெரியோர்கள் சொல்லி யிருக்கிறார்கள். இது உண்மையே. ஆனால் இதன் உள்ளர்த்தம் இன்னதென்று உண்மையறிந்து உத்தம சித்தத்தோடு செய்பவர்தான் அருமையாகவிருக்கிறது.

ஸ்வர்ணபுரியிலிருந்து சௌநகபுரியில் வந்தவதரித்த மௌனசுந்தரியை ஸ்வர்ணமணி யென்று பெயரிட்டழைப்போம். ஸ்வர்ணமணிக்கு விவாககாலம் கிட்டவே அவளுடைய பெற்றோர் அவளுக்கிசைந்த ஓர் வரனைத்தேடி அவளை விதிப்படி கன்னிகாதானம் செய்துகொடுத்து அவளுக்கு விவாகஸம்ஸ்காரம் பூர்த்தியாகச் செய்துவைத்தார்கள். ஸ்வர்ணமணி மங்கைப்பருவமடைந்து மணவாளனையடைந்துவாழும் பருவம் நேரவும் அக்காலத்திலாகவேண்டிய ஸம்ஸ்காரங்களும் குறைவின்றி நடந்தேறின. இவள் பூர்வத்தில் செய்த தவமே யுருவெடுத்தாப்போலுமுள்ள இவள் பர்த்தா பால்யவயதினனாயினும், பூர்வ ஜன்ம வாசனையால் புனித ஜன்மமெடுத்த புண்ணியனா யிருக்கவேண்டிய காரணத்தினால், விதிப்படியே இவளுக்கேற்ற கணவனுமிருந்தான். சோபனமுகூர்த்தமவனுக்கு சோபானக்கிரம ஆரம்பமாகவே பலித்தது. பள்ளியறை யுபதேசம்செய்து பாவையர் பாடிய பாடல்களெல்லாம் அவனுக்கு ஆத்மபரமாகவே அருத்தம் கொடுக்க ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்ட கோபிகள் அவன் ஒளித்தபோது பட்ட வருத்தத்துக்கொப்ப அவன் ஆத்மதாபம் மேலிட்டு அன்பிற்குவிங்கி உள்ளமுருகி நையலானான். ஆதிபௌதிகமாக வுண்டான தாபம் ஆதிதெய்விகமாகி, அதுவும் முதிர்ந்தவிடத்து அத்யாத்மிகதாபமாக மாறி அதுவே உள்ளுக்குள்ளிருந்து குமுறிக்கொண்டு எரிமலையினடியிலுள்ள தீப்போல் உள்ளூறக் கொதித்துக்கொண்டிருந்தது. சாதாரணமாக வுண்டாகும் ஆதிபௌதிக தாபத்தையே வெகுகாலம் சாந்திசெய்யாது சகித்திருத்தல் கூடாதென்றால் அக்னிகளுக்கெல்லாம் மூலாக்னியான அத்யாத்மிக தாபமுண்டாய் விட்டால் ஒருவன் எவ்வளவுகாலம் சகித்துப் பொறுப்பான். உள்ளே தாபம் அதிகரிக்க தேகோபாதியே ஆதிவியாதியெனக் கண்டு தேகத்தை யொழிக்கத் தீர்மானித்தான். ஆனால் பூர்வஜன்ம புண்ணியம் பலமாயிருந்ததால் "காலத்தில் எதுவும் தானே வரும்" என்கிற விதிப்படி சமய சஞ்சீவியாக இவன் தாபந்தீர்க்கும் ஆப்தசகாயர் இவனுக்கு உள்ளூறப் பிரசன்னமாகி வெளியிருந்து பேசுவர்போல் மாயையின் சாமர்த்தியத்தை இவனுக்குத் தோற்றினார். மாயை வசப்பட்ட பாலன், பாவம்! உண்மை யுணரமாட்டாது விளக்கைத்தீண்டும் அந்துப்பூச்சிபோல் தாபத்தீயில் விழுந்து துடித்தான். விரக்திவைராக்கியம் உள்ளுக்குள் தானாகவெழ, ஏழைப்பாலன், விடுவதெது பிடிப்பதெது வென்று தெரியாது மயங்கிநின்றான். மாயையின் சுபாவத்தை யறிந்திலன்!

"கண்டதேகண்டுங்கண்டுங்காண்கிலோமதன்கண்மாயை
கண்டதைக்காணவிட்டாற்காணாதவொன்றாய்க்காட்டிக்
கண்டபின்கண்டதாகக்காட்டியேயோட்டும், இத்தைக்
கண்டுநாம்விழித்துக்கொண்டாற்காணவேயோடும்மாயை."

ஐம்புலன்களுக்கு விஷயமாகக் கண்ட தொன்றையே மீட்டு மீட்டும் கண்டும் (புலன்வழி சென்றனுபவித்தும்) அந்த விஷயங்களினிடத்தில் அதற்குக் காரணமாக வுள்ளமாயையைக் காண்கிலாது தவிக்கிறோம். "கண்டதை"—புலன்களுக்கு விஷயமாம் ஒன்றை (அவ்விஷயப் பற்று நீங்கக்) "காணவிட்டால்"—அந்தர்முக தரிசனத்தால் புலன்வழி சென்று காணாமல் விட்டால், நாமரூப விகாரத்தை ரூபமாயுள்ள திரிசிய வஸ்துவாம் விஷயம் "காணாதவொன்றாய்"—அவ்யக்தம் வரையில் காட்டி, அந்த அவ்யக்தத்தைக்கண்டபின், "கண்டதாக"—தான் காணப்பட்டதாகக், "காட்டியே"—அம்மாயைதன்னைக் காட்டியே, ஓட்டும். "இத்தை"—

இப்படி ஓட்டுவிக்கும் ஒன்றான அருளைக் "கண்டு நாம்விழித்துக்கொண்டால்" (அதாவது அருட்கண் பெற்றுப்பார்த்தால்) "காணவே யோடும் மாயை"—நாம்பார்த்த மாத்திரத்தில் நம்முன் நில்லாது ஓடும் மாயை. இப்படிப்பட்ட மாயையின் ஜாலத்தை குருவருளின்றியும், தருவழிபற்றாமலும் கண்டு நீக்குவது அரிதிலுமரிதாகையால், அவன் இம்மாயைசெய் இந்திரஜாலத்தில் அகப்பட்டுத் தவித்தான். கண்டோர் அவனுண்மையுணராது பித்தனென்று சொல்லிப் பிதற்றினார்கள்.

"கண்டவக் கிணற்றையன்றிக் காண்கிலாத் தவளைபோலக்
கண்டவிவ் வுலகையன்றிக் காண்கிலோ மேனும்ஐயன்
கண்டதை விண்டுகாட்டக் கருணையா லுலவுகின்றான்
கண்டுகொண்டாளாகாமற் காலத்தைக் கழிக்கலாமோ."

கிணற்றுத் தவளைபோல உலகவின்பமே பெரிதாகப்பற்றியுள்ளவர்கள் புலனுக்குப் பட்டதன்றி வேறில்லையென்று சாதித்துக் காலந்தள்ளி வந்தாலும், பரிபக்குவ மெய்தியவர்கள் அவர்களைப்போல இந்த ஜகத்தைக்கொண்டு அவ்வளவு திருப்தியடைந்திருப்பது சாத்தியமல்ல. அன்றியும் ஜகதீசன் அவர்களுக்கு இந்த ஜகத்தோற்றத்தி னுண்மையை யுள்ளபடி விண்டுகாட்டக் "கருணையா லுலவுகின்றான்." ஆதலால் அவர்கள் இவர்களைப்போ லிருத்தல் அசாத்தியமே. ஒரு பரதேசியினிடம் இந்த உபத்திரவத்தைச் சொல்ல, "அப்பா, ஞானிக்கு உலகம் பைத்தியம், உலகத்தார்க்கு ஞானி பைத்தியம். இது தொன்றுதொட்டுள்ள சம்பந்த முறையாதலால் இதைவிலக்க வொண்ணாது" என்றார். இதுநிற்க.

இப்படி ஸ்வர்ணமணியின் பர்த்தாவாகிய "அருள்வீரய்யன்" ஆத்யாத்மிகதாபம் பொறுக்காது, அதினின்றும் தப்பியோட ஞான-வைராக்கியம் என்னும் இருகால்கள் முளைக்க, அவன் அவைகொண்டெழுந்தோட யத்தனித்ததும், காலில் பலமின்மையால் தத்தித்தள்ளாடிவிழ, அவனை ஏகதேசமாயறிந்த பந்துக்கள் பித்தனென்றும் பேயனென்றும் பிதற்றியழைத்துப் பெருவாதம் செய்யத் தொடங்கினார்கள். பூர்வஜன்ம சாபத்தால் அவன் இல்லறக்கிழத்தியும் நல்லறம் விட்டு அவனைத் தப்புந்தாறுமாய்ப் பேசத் துவக்கினாள். தாபம் தணிந்து சாந்தமெய்தாதவிரன் இவ்வன்பிலாள் சொல்லை ஆற்றமாட்டாது பொங்கித்தவித்தும் பொறுக்கமாட்டாது கடைசியில் துள்ளிக்குதித்துத் தூர்த்தனெனப் பெயரும் பெற்றனன். ஐயோ! விதியின் செயலை யாரறிவார்! விதியின் வலியை யார்வெல்வார். அனுகூல தாம்பத்தியம் செய்து ஆத்மலாபம்பெற அக்னிசாக்ஷியாய் அம்மி மிதித்து அருந்ததி பார்த்துத் தான் கொண்ட பர்த்தாவுக்கு உண்மையாயிருக்க விசைந்த வுயிர்த்தோழியும், அக்னிசாக்ஷி பிராமணர்கள் சாக்ஷியாக அக்னிவலம் வந்து ஏழடியுமுடன்நடந்து (ஸப்தபதி முடித்து) கைப்பிடித்த கண்ணுக் கண்ணான கணவனும் ஒருவரை யொருவருணராது இப்படிப் பிணங்கிச் சிணுங்கிக் கொண்டு உள்ளன்பிருந்தும் உண்மை யுணராது துன்பப்பட வாய்த்ததே! இத்தலைவிதிக்கென் செயலாம்!

* * * *

இடையாற்று மத்தியிலே தனையுடையாள் கோயிலொன்று கட்டி அதனுள் அம்பிகையை ஆவாஹனம் செய்து அவள் துயில்கொளாதிருந்தெழுந்து தனைக்காத்தருள

வேண்டி யொரு சடைமுனிவர் இடைவிடாது நிஷ்டைபுரிந்து ஐம்புலனடக்கி அந்தர்முகமா யிருந்தபடி அகோர தவம் செய்து வருகிறார். அவரையடுத்து அன்பினால் அகநெகநைந்து அழுதுள்ள வண்ணமாய் ஓர் காலை கண்ணீர் ஆறாப் பெறுகக் கரைந்துருகி நிற்கின்றான். "தனக்காக வொன்றும் வேண்டாத்தபோநிதி பெரிதுமுள்ளான்" "உள்ளங் கனிந்தென்னை உய்யப்பார்த்துதவானோ" வென்று முணுமுணுக்கும் சப்தம் கணகண வென்று கண்டாமணி யடித்தது போல் ஜகமெங்குப் பரவியொலிக்கிறது. பாற்கடலிற் பள்ளிகொண்டுறங்கும் பரந்தாமனும் அச்சத்தங் கேட்டு அவர் யோகநித்திரை கலைந்து பார்த்தாரென்றால் அம்மந்திரத்தின் வீரிய சக்தியை யாமென்னென்றுரைக்க வல்லேம். பரந்தாமன் கண் விழித்துப் பரமயோகி நிஷ்டை கலைந்தாரில்லை. "எண்ணினாற் கெண்ணினபடி யிருந்துதவு மீசன்" "கண்ணினாற் கரைந்துருகி உளஞ்சோரு முண்மையனையுற்று நோக்கி" "அவன் உள்ளத்திலுள்ள கள்ளங் கரைந்திட" வென்று நினைத்தார். கல்போல் கனத்த தேகத்தை யுடைய பாலன் தன் பளுவெல்லாந்தீர்ந்து பஞ்சுபோல் பறந்துபோகும் பான்மையனானான். "உள்ளம் உருக வுருகக் கள்ளங் கரையக் கரைய," என்றபடி அவனுக்கு மலபரிபாகம் நேருங்காலம் கிட்டவும், சிறுவன் தன்னைமறந்து தன் தேகஸ்மரணையுமற்று, சித்தலோகத்தில் தான் தேஜோமயமாக விளங்கவும் அங்குதான் அடிபணிந்து அகத்தில் துதித்து நின்ற சடைமுனிவர் கோடிசூரியப் பிரகாசம் போன்று தன்முன்னுதயமான ஞானசூரியனாக விளங்கவும், அந்த ஞானசூரியனி லிருந்தும் நழுவிவந்த கிரணம்போலுமுள்ள தான் சுபாவமாக அதை யடைந்து அஃதோடொன்றாய்க் கலந்து விளங்க விரைந்தெய்தியும் இடையே இன்னதென்று விளங்காத ஒருதடை நேரிட்டதுபோல் தோற்றவும், (பிரத்யகாத்மஸ்வரூபமான) அந்த நிலையிலிருந்தபடி, அவன் தன்மயமாகியும் தன்னை இரண்டறக்கலக்க வொட்டாது தடுக்கும் காரணமென்ன வென்று சுத்தாத்மகனாயிருந்து சங்கற்பித்து விசாரிக்க, அந்த விசார சாகரத்தில், தனது பூர்வஜன்மவாசனைகளெல்லாம் அருவுருவாய் வந்து அவன்முன் விளங்கக்கண்டான். அதில் ஸ்வர்ணமாபுரியில் தவம் செய்துகொண்டிருந்த மௌனசுந்தரியாம் மின்னற்கொடியைக்கண்டு அவளிடத்தில் பற்றுண்டாக, உடனே அவள்மயமாகி, அவளுடைய பாவனாவிசேஷங்களையும் ஜன்மலாபவிவரங்களையும் ஆதியோடந்தமாயறிந்து, தன்னைவிட்டுமவள்பிணங்கிச்சிணுங்கி விலகியதும், பின் தனது பூர்வகர்மவாசனை யொழிய அவள் தன் குற்றமறிந்து தான் பர்த்தாவுக்குச் செய்த பெரும் பிழையை நினைத்துருகிவருந்தியழுதழுது தேம்பி அங்கம் சோர்ந்து அவள் தேகம் ஆறாயோடி ஒரு குளமாய் நிறைந்து தேங்கி நின்றதையும், அத்தடாகத்தின் நீரைக் கண்டு தான் அதனாலிழுக்கப்பட்டவனாய், அத்தீர்த்தத்தின் மகிமையையுன்னி யதில்ஸ்நானம் செய்ய, அதினின்று மெழுந்திருக்கும்போது தான் தனது தர்மபத்னிசமேதனாக விருக்கக் கண்டு அதிசயித்து, உள்ளம் பரவசனாய், உண்மையை யுணர்ந்தோமென்று ஆனந்தத் தாண்டவமாடிக் களைத்து அங்கு தன்முன் திருக்கோயில் கொண்ட ஈசன் முன்னிலையில் விழுந்து புரண்டு சிரிசிரியென்று சிரித்தெழுந்திருக்க, தர்மபத்தினி தன் பர்த்தாவைப்போற்றித் தழலிலிட்டமெழுகுபோலுருகித் தழதழத்தசொல்லினளாய்த் தன்னைமறந்து தெய்வத்தைத் துதித்து நிற்கக் கண்டான்.—கண்டு களித்து முன்பட்ட கஷ்டங்களெல்லாம் மறந்து கண்டது கனவோ நனவோவென்றுணரப் பக்கத்திலிருந்த பத்தினியை மெல்லக்

கிட்டி மெதுவாய் அணைத்துத் தழுவினன். கண்டது கனவானாலும் தன்னிருகைகளினுள்ளே கனிந்து நின்றது நனவின் முருவேயாகத் தோற்றக்கண்டு மெல்ல மெல்ல அவ்வுருவைத் தன்னோடணைத்து இறுகத்தழுவி மார்போடணைத்துக் "கண்ணே, யென்கண்மணியே! உன் நிஷ்டை யின்னும் கலைந்திலதோ!" வென்று இன்புறவோதினன். கண்விழித்தும் அவள் தன் கண்ணுள்மணியாகவே விளங்கக்கண்டான். "அன்பின் இரகசியத்தை யாரே அறிய வல்லார்" என்று ஒருவரையொருவர் உளக்கண்ணாற் பார்த்து இருவரும் ஒருவராய் விளங்கக் கண்டு சுடரும் ஒளியும்போல் ஒன்றாயிருந்துண்மையை யுணர்ந்து உள்ளன்பு பூரித்து,

"சொல்லற நின்றதோர்
இல்லற தர்மம்
நல்லற முடிவில்
தொல்லையறுத்திடும்."

——என்று சித்தர்குழாம் பூமழைபொழிந்து கீதம்பாடியதைக்கேட்டு, மனமகிழ்ந்து சாந்தோபசாந்தமெய்தி சத்துக்களாய் வெகுகாலம் வாழ்ந்திருக்கப்பெற்றார்கள்.

* * *

ஸ்வர்ணமணிக்கு முதிர்பர்வம் நேர்ந்தும் அவள் இளமையின்னும் அவளை விட்டு நீங்கவில்லை. "அருள்வீரய்யன்" தனக்கு நேர்ந்த அநுபவத்தையுன்னித் தான் புனர்ஜன்மம் பெற்றதாகவெண்ணி முனிபுங்கவர் தன்னைப்பார்த்து "அருளானந்த முண்டாகுக" வென்று ஆசீர்வதித்த விசேஷத்தையுன்னி "அருளானந்தன்" என்கிற பேரையே கொண்டு பெரு வாழ்வு பெற்றிருந்தான்.

அருளானந்தருக்கும் ஸ்வர்ணமணியாயிருந்த சாந்தமாதேவிக்கும் குடும்பம்பெருத்தும் அவர்களிருவரும் இல்லறத்துறவேதுறவென்று தேர்ந்து "எது இருந்தும் அருளொன்றின்றாகின் என்னாம்! அருளொன்றிருந்தால் எது தான் கிட்டாத தாகும்!" என்று அகப்பற்று அற்றவராய் தம்மைக் கூட்டிவைக்கக் காரணமாயிருந்த முனிபுங்கவர் நிஜரூபத்தையேதங்கள் ஸ்வரூபமாகத் தியானம் செய்து தியேயாகாரமாய், தியேயப்ரம்மத்தோடொன்றுபட்டு ஞேயப்ரம்மத்தையுபாசித்து கைவல்யம் பெற்று கிருதார்த்தர்களானார்கள்.

"ஆயிரம் பிழை செய்தாலுமருவராதணைத்தணைத்து
மாயையின் மபக்கந்தீர மதியமிர்தூட்டியூட்டிக்
காயெனவிருந்தநம்மைக்கனிந்திடப்பார்த்துப்பார்த்துச்
சேயென வளர்க்குமையன் திருவருள் வாழிவாழி."

——என்கிற பாட்டையவர்களிருவரும்மனதொத்து அகம்பூரித்துப் பாடுவதைக் கேட்டால் பட்ட மரமும் பால்விட்டொழுகுமென்றால் ஆத்மாநாத்ம விவேகம் பெற்ற முமுக்ஷுக்கள் மனம் எப்படிக் கரைந்துருகிவழிந்தோடி பொழிந்துவிடுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

ஓம் தத் ஸத்.

## THE REVELATIONS OF THE RAMAYANA, OR, RAMA'S LIFE UNVEILED.

**(A Popular Ballad)**

## ஞானராமாயணக்கப்பல்.

(From Sri R. S. SUBBALAKSHMI AMMAL.)

(397-வது பக்கத்தொடர்ச்சி.)

இன்பமென்கின்றவை
துன்பமென்கின்ற இ
அசுபவாசனை யென்னும்
எண்ணமாம் அசோக
ஆத்துமாவென்னும் ஸ்ரீ
இச்சையென்னும் மா
நிராசை யென்கின்ற
என்றைக்குந் தன்புன் வ
ஆனந்த மென்கின்ற
இல்லாமலே யாத்மா
வைராக்கியமெனும் லக்ஷ-
விக்ஷேபமென்கின்ற
சிந்தனையென்னும் க
சந்தோஷமென்கின்ற
நிதித்தியாசனமென்னும்
ஆனந்தமென்கின்ற
ஜனனமென்னுஞ் சப்த
பயமென்னும் வாலிமேல
அபயமென்று வந்த சுக்
சுபவாசனையென்னும்
நிதித்தியாசனமென்னும்
மோஹமென்கின்றதோர்
லோபமென்கின்ற இ
அசுபவாசனை யென்னும்
ஆனந்தமென்கின்ற
உல்லாசமென்னு மனு
எண்ணமென்னும் அசோக
அக்ஞானமெனும் சப்பு
சந்தேகமென்கின்ற
விபரீதமெனு மிந்திர
மயக்க மென்கின்ற
இராக்ஷதமென்கின்ற
மௌனமென்கின்ற அக்
துன்பமென்கின்ற இ
மோஹமென்கின்ற தோர்
திடமென்னும் ஒப்பில்லா
சாத்வீகமென்னும் வி
தாமசமெனுங் கும்ப

தேகியையுருக்கும்
லங்கையிலிருக்கும்
ராக்ஷதர்மொய்க்க
வனத்தினில் வைக்க
ராமனும் கடுகி
ரீசனை முடுகி
பூமியிற் சாய்த்து
ராமலே மாய்த்து
மைதிலி பால் வந்து
ராமனும் நொந்து
மணனுடனயர்ந்து
கானகத்திலலைந்து
வந்தனையும் கொன்று
சவரிபாற் சென்று
அனுமானைக்கூடி
சீதையைப் பாடி
தருக்களைக்கொய்து
ம்பொன்றை எய்து
ரீவனைக்காத்து
குரங்குகளைச் சேர்த்து
அனுமானைத் தூண்டி
சமுத்திரத்தைத்தாண்டி
லங்கணியைத் தொலைத்து
ராக்ஷதரைக் கலைத்து
சீதையைக்கண்டு
பூதி மேற்கொண்டு
வனத்தையு மழித்து
மாலியைக் கிழித்து
அக்ஷடனைக்கழித்து
சித்தனைப் பழித்து
பாசத்தை எதிர்த்து
ராவணனையெதிர்த்து
கினியைப் பெருக்கி
லங்கையைக் கருக்கி
வாரியைக் கிட்டி
அணையினைக் கட்டி
பீஷணனைக் கிட்டி
கர்ணனையும் வெட்டி.

இராக்ஷதமென்னு மி
விபரீதமெனு மிந்திர
மயக்கமென்கின்ற
வைராக்கியமெனும் லக்ஷ்
நிதித்தியாசனமென்னும்
நிஷ்டையென்னும் சஞ்
வைராக்கியமென்கின்ற
விபரீதமெனு மிந்திர
சஞ்சிதம் என்கின்ற
தீரமென்னும் மோஹ
அசுபவாசனையென்னும்
சுபவாசனையென்னும்
ஆத்மாவென்கின்ற ஸ்ரீ
கெம்பீரமென்கின்ற
இராக்ஷதமென்னும் இ
ஞானமென்கின்ற ஒரு
நானென்னும் ஆணவக்
தசேந்திரியமென்னும் தச
ஆனந்த மென்கின்ற
மௌனாக்னி தன்னில்
பிரும்மமயமென்கின்ற
ஆனந்தமென்கின்ற
மோக்ஷமென்கின்ற அ
ஜீவத்வமறவென்னும்
பிருஹ்மமயமென்கின்ற
மோக்ஷமென்கின்ற
தேசுள்ள பூரணசந்த்
செழிப்பாய் விளங்கினான்
மாசில் வெகு நாமன்
மலர்முகச் சோமன்
அபேக்ஷயுபேக்ஷயற்ற
மாக்ஷிபெறயோத்திதனை
காக்ஷியொடு சாக்ஷியா
ஸர்வசாக்ஷி யாநின்று
மாசற்ற பக்தர்கள்
இதயத்திருந்தவர்
ஆசித்து ரக்ஷிக்கும்

ராவணனையதட்டி
சித்தனைமுட்டி
பாசத்தால் மயங்கி
மனனுடனுபங்கி
அனுமார் களிக்க
சீவியையளிக்க
லக்ஷ்மணர் களிக்க
சித்தனைச் சிதைக்க
மூலபலமெதிர்க்க
னுஸ்திரம் வதைக்க
ராக்ஷதர் முடிக்க
வானரங்கள் கெடுக்க
ராமன் கடுத்து
கோதண்டமெடுத்து
ராவணனையடுத்து
பாணத்தைத் தொடுத்து
கவசத்தையுடைத்து
மஸ்தங்களையுடைத்து
சீதையைக்கண்டு
குளியென்று விண்டு
தசரதனை நாடி
சீதையைக்கூடி
யோத்தியினில் புகுந்து
மகுடம் புனைந்து
தசரதன் தானாகி
அயோத்திக்கோனாகி
ரோதயம் போலே
தரும நெறியாலே,—
வாழ்பரந்தாமன்
வந்த ரகுராமன்
ஆனந்த தீரன்
ஆளுமதி வீரன்
விளங்கு ரகுராமன்
ஜகத்தை ரக்ஷித்து
யாசித்தவரனை
இச்சித்த வண்ணம்
ஆத்துமா ராமன்.

* —இவரை— *

நேசித்துலெக்ஷியமா மனதிலேவைத்து
வாசித்துவந்தார் வாழ்வெலாம்பெற்றார்
நேசித்துக்கேட்டார் நித்தியசுகம்பெற்றார்
ஊகித்தச்சிந்தித்தாருண்மையையுணர்ந்தார்.

ஏலே லோ ஏலே லோ தத்தய்யா
ஏலே லோ ராமஜயம்.

## The New Scheme for Primary Education.

## பிரதமவித்யாபோதனை-நூதன ஏற்பாடு.

இப்பொழுது வித்யா இலாகாத் தலைவராயிருக்கும் கனம் டாக்டர் போர்ன் அவர்கள் நாட்டுப்புற ஜனங்களுக்கு உபயோகமாகும்படி, பிரதம பாடசாலைகள் 200 குடிகளுக்கு மேற்பட்டுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் ஏற்படுத்த வேண்டுமென்றுத்தேசித்து அதற்காக வேண்டிய ஏற்பாடுகள் செய்திருக்கிறார். இவ்வேற்பாட்டுப்படி பிரதமவித்தை போதிக்கும் பள்ளிக்கூடங்கள் இருவகைப்படும். ஒன்று யூனிவர்ஸிடிப் பரீக்ஷைகளுக்குப் படிக்க உத்தேசிக்கும் சிறுவர்க்கு இப்பொழுதைப்போல் வேண்டியபாடங்களைக் கற்பிக்கும் பிரதம பாடசாலைகளாகும். மற்றொன்று நாட்டுப்புறங்களில் எழுதப் படிக்கவும் கணக்குப் பார்க்கவும் கற்றுக்கொண்டு அவரவர் தொழில்களில் பிரவேசித்து ஜீவனம்செய்ய உத்தேசிக்கும் நாட்டுப்புறச்சிறுவர்களுக்குபயோகமான படிப்புச் சொல்லிக் கொடுக்கும் நூதன பிரதம பாடசாலைகளாகும். இவை "Rural Schools" நாட்டுப்பள்ளிக்கூடங்கள் என்னும் பெயரால் விளங்கும். இப்பள்ளிக்கூடங்களில் படிக்கும் சிறுவர்களுக்கு எழுத்து வாசனையும் கணக்குவாசனையுமுண்டாவதற்கு வேண்டிய அளவு அவர்கள் படிக்கும் சொற்பப் படிப்பு அவர்களுக்கு முற்றும் காரியத்திலுபயோகப்படும்படி அந்தந்த இடங்களுக்குத் தக்கபடி காலதேச வர்த்தமானங்களை யொட்டி படிப்புச் சொல்லிக் கொடுக்கப்படும். இப்பொழுதுள்ள ரிஸல்ட் பாடசாலைகள் பெரும்பான்மையாய் இந்த நாட்டுப் பள்ளிக்கூடங்களாகமாற்றப்படும். இப்பள்ளிக்கூடங்களின் உத்தேசம் பழைய திண்ணைப்பள்ளிக்கூடங்களை யொட்டினதாய் அப்பள்ளிக்கூடங்களிலுள்ள குறைகளை நிவர்த்தித்து இக்காலத்துக்குத் தக்கபடி நித்தியப்படிஜீவனத்துக்கு இன்றியமையாத எழுத்துக் கணக்குகளும், உப்பு, அப்காரி இலாகா, தபாலாபீஸ் முதலிய சாமான்யஜனங்களையும் பாதிக்கும் சர்க்கார் இலாக்கா நடபடிக்கைகள் கிராமநடபடிக்கைகள் முதலானவிவரங்கள் பிள்ளைகளுக்கு பழக்கத்திற் பொருந்த வரும்படி போதிக்கப்படும். ஒவ்வொரு கிராமத்திலும் கிராமபாடசாலைக் கட்டடமொன்றும் அதை யொட்டியொரு தோட்டமும் இருக்க வேண்டும். அதில் சிறுவர்கள் மூல வர்க்கங்களின் சுபாவத்தை பயிர்பச்சை பயிரிட்டுப் பார்த்து நேரில் தெரிந்து கொள்வார்கள். இந்த ஏற்பாடு உடனே ஊர்ஜிதத்துக்குவர வேண்டிய ஏற்பாடுகள் எடுத்துக்கொண்டு வித்யா இலாகாத்தலைவர் ஒரு உத்தரவு பிறப்பித்திருக்கிறார். கவர்ன்மெண்டு டிரெயினிங் ஸ்கூல்களில் கிராமபாடசாலைகள்உபாத்தியாயர்களாகவர தர்பீது செய்யப்பட்டு வருபவர்களும் கிராமபாடசாலையுபாத்தியாயர்களாயிருப்பவர்களும் கிராமாந்திரங்களில் ஏற்படுத்தும் பள்ளிக்கூடங்களில் போதிக்கப்படும் விஷயங்களைப் பற்றியும் ஊர்ப் பள்ளிக்கூடங்களுக்குவேண்டிய சாதக சாதனங்களைப் பற்றியும் தங்கள் மேலுத்தியோகஸ்தர்கள் மூலமாகத் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப் பட்டிருக்கிறார்கள்.

---

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

(அதிகாரம்—1.)

சுமார் 30 வருஷங்களுக்கு முன் திருச்சிநாப்பள்ளி ஜில்லாவில் பூவரசநல்லூரென்னும் கிராமத்தில் பச்சுவீடென்று பெயர் வழங்கிய ஓர் வீட்டில், ஒருநாள்காலையில் சுமார் 10 மணிக்கு 'அப்பா மகாதேவா, மகாதேவன் உள்ளே இருக்கிறானா' என்று கூப்பிட்டுக் கொண்டு ஒரு பெரியவர் உள்ளே நுழைந்தார். அவர் சிவந்த நிறமாயும், வெகு உயரமாயுமிருந்தார். அவருக்கு வயது சுமார் 45 இருக்கலாம். உள்ளே ஒருவரையும் காணோம். ஓர் அம்மாள் உள்ளே இருந்து 2, 3 தடவை இருமினாள். அது பெண்டுகளுக்குள் உள்ளே

புருஷர்கள் இல்லை தான் பதில் சொல்ல முடியவில்லை யென்பதற்கு அடையாளம். ஆனால் வந்தவர் செவிடாதலால் அவருக்கு அது காதில் படவில்லை. பிறகு ஓர் சிறிய பெண் வெளியில் வந்து அவரைப்பார்த்து, 'மகா தேவய்யர் இங்கே இல்லை' என்றாள். பெரியவர் தன்னை 'எப்போ வந்தே' என்று கேட்டதாக நினைத்துக் கொண்டு அம்மா இப்போதுதான் வந்தேன் ஆத்தில் எல்லாம் க்ஷேமம் தானே என்றார். அதற்கவள் 'இல்லே தாத்தா அவர் இங்கே இல்லே' என்றாள். பெரியவர், 'எலையா, அதற்குள் எலை போட்டால் நான் சாப்பிட முடியுமா அம்மா, நான் ஸ்னானம் பண்ணி பூஜை யெல்லாம் பண்ண வேணுமே' என்றார். அதற்கு அந்தப் பெண் 'என்ன தாத்தா எட்டிக்கு பேட்டி சொல்லுகிறேர்' என்றாள். பெரியவர், 'அம்மா பாட்டி இங்கே எப்போ வந்தாள். அவள் என்ன சொன்னு' ளென்றார். அந்தப் பெண் கோபித்துக் கொண்டு 'போங்கோ தாத்தா உங்களோடு யார் பேச முடியும்' என்று சொல்லி உள்ளே போய்விட்டாள். கிழவர் பாட்டியை கூட்டிவரப்போகிறாள் போலிருக்கிறதென்று நினைத்து 'அடி பொண்ணே பாட்டியை இப்போது கூப்பிட வேண்டாம். அப்புறம் பார்த்துக்கொள்வோ' மென்றார். அப்பெண் உள்ளே போனதும் ஓர் அம்மாள் அவளை வைது, அவருக்கு காது கேழ்க்காது பலமாய் சொல்லிவிட்டு வா என்று அவளை மறுபடி வெளியே அனுப்பினாள். அப்பெண் வெளியே வந்து மகா தேவய்யர் இங்கே இல்லே என்று பலமாய் கத்தினாள். கிழவர் அம்மா இதை முன்னமேயே சொல்லக்கூடாதா! கிடக்கிறது என்று சொல்லிக்கொண்டே வெளியே போனார்.

இவர் வெளியே போகும்போதே இவர் எதிரில், இரண்டு பேர்கள் அவ்விட்டில் நுழைந்தார்கள். அவர்களுள் ஒருவர் சிவப்பாயும், அம்மைவடு நிறைந்த முகத்துடனுமிருந்தார். மற்றவர் சாதாரண உயரமாயும் மாநிறமாயுமிருந்தார். அம்மைத்தழும்பு முகமுள்ளவருக்கு சுமார் 50 வயதிருக்கலாம். அவர் இவரைக் கண்டவுடனே 'முத்து நீ நேற்றே வருவதாகச் சொன்னவன் ஏன் இவ்வளவு தாமத' மென்றார். கூட வந்தவர் புதிதாய் வந்தவருக்கு நமஸ்காரம் செய்தார். புதிதாய் வந்தவர், 'அப்பா மகாதேவா, நான் இப்போதான் உன்னை விஜாரித்துவிட்டு வெளியே வந்தேன். மகராஜனாயிரு! சிக்கிரம் ஓர் பிள்ளைக் குழந்தை பிறக்க வேணு' மென்றார். புதிதாய் வந்தவர் பெயர் முத்துவய்யர். அம்மைத் தழும்புடையவர் பெயர் சேதுவய்யர். சேதுவய்யருக்கு சிறு வயதில் அம்மை போட்டி அவர் பிழைப்பதே வெகு அரிதாய்ப் போய்விட்டது. பிறகு அவர் பிழைத்தபோதிலும் அம்மைத்தழும்புகள் மட்டும் அவர் முகத்தை விட்டு நீங்கவில்லை. அத்தழும்புகளால் அவர் முகமெல்லாம் குழி குழியாயிருந்தது. சேதுவய்யரை சிலர் மஞ்சள் சேதுவய்யரென்றும் கூப்பிடுவார்கள். ஏனென்றால் அவர் கலியாணத்தின்போது அவருடைய அத்தான், சேஷுவய்யர் சேதுவய்யர் பெண்சாதியைப் பார்த்து, 'அம்மாஞ்சிமன்னி உன் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். உனக்கு மஞ்சள் தேய்க்க கல் அகப்படாமல்போனால், எங்கம்மாஞ்சியின் மூஞ்சியில் மஞ்சளை வைத்து இரண்டு இழுப்பு இழுத்தால், நீ மஞ்சள் பூசிக்கொள்ளலா' மென்றார். எல்லோரும் இதைக்கேட்டு கொல்லென்று சிரித்தார்கள். அது முதல் சேதுவய்யருக்கு 'மஞ்சள் சேதுவய்ய'ரென்று பெயர் ஏற்பட்டது. முத்துவய்யர் சேதுவய்யரைப்பார்த்து 'அண்ணா காரியத்தை முடித்தீர்களா' என்றார். அதற்கு சேதுவய்யர், முத்து நானென்ன செய்யட்டும் நான் வந்தது முதல் அந்த போக்கிரிகிருஷ்ணசாமி அய்யனைப் பார்க்கிறேன். அவன் ஊரிலில்லை. அவனைக் கூட்டிப்போனால் தான் நாட்டுக்கோட்டையான் நமக்கு ஏதாவது சகாயம் செய்வான். இன்றைக்கு காலமே வருவானென்று சொன்னார்கள். காலமேயும் வரக்காணோ மென்றார்.

முத்துவய்யர்.—என்ன அண்ணா நாளாகிறதே.

மகாதேவய்யர்.—முத்துமாமா, சேதுமாமாவும் நானும் வரும்போது சேதுமாமா இதே விஜாரமாய்த்தான் பேசிக்கொண்டுவந்தார்.

சேதுவய்யர்.—நல்லது தொகை ஜாக்ரதை செய்தாயா.

முத்துவய்யர்.—இதோ கொண்டுவந்திருக்கிறேன்.

சேதுவய்யர்.—நல்லது, கிருஷ்ணசாமி அய்யன் வந்து விட்டானே என்று பார்ப்போம் வா. பணம் இங்கேயே இருக்கட்டும். அதை காண்பித்தால் அந்தப்பயலுக்கு பேராசை இன்னும் அதிகமாகிவிடும்.

முத்துவய்யர்.—ஆனால் தொகையை இங்கேயே மகாதேவனிடத்தில் கொடுத்துவிட்டு வரட்டுமா.

சேதுவய்யர்.—ஏன், மகாதேவனிடத்தில் ஒப்புவிக்க சந்தேகமென்ன.

முத்துவய்யர்.—ஒன்றுமில்லை, அப்படியே ஒப்புவிக்கிறேனென்று சொல்ல,—

மகாதேவய்யர் பக்கத்து அறையில் அவரை கூட்டிப்போய் ஓர் பெட்டியைத்திறந்து அதில் முத்துவய்யர் பணத்தை வைக்கச்சொன்னார். முத்துவய்யர் பணத்தைக் கையில் எடுத்து 'என்ன கனமப்பா! தூக்கக்கூட முடியவில்லை. பாழாப்போ'றவனுக்கு கொட்டப்போகிறேனென்று சொல்லி பெட்டியில் வைத்தார். மகாதேவய்யர் பெட்டியைப் பூட்டி திறவுகோலை உயரத்தில் ஓர் பரணியில் வைத்துவிட்டு வந்த இருவர்களையும் கூட்டிக்கொண்டு வெளியே போய்விட்டார். முத்துவய்யர் சேதுவய்யர் இவர்களுக்கும் மகாதேவய்யர் குடும்பத்துக்கும் உள்ள சம்மந்தத்தை நாம் இதுவரையில் சொல்லவில்லை. முத்துவய்யர், சேதுவய்யரும் மகா தேவய்யருடைய மாமனும், சகோதரிகளுடைய பிள்ளைகள். மகாதேவய்யருடைய குடும்ப யோகக்ஷேமத்தைச் சற்று விசாரிப்போம். மகா தேவய்யர் அந்த ஊரில் பெரிய தனவான். அவர் குடும்பம் பரம்பரையாய் நல்ல ஸ்திதியுள்ள குடும்பம். அவருக்கு சொத்து ஏராளமாக இருந்தும் வீடு சிறிய வீடாகத்தானிருந்தது. அந்த வீட்டில் ஓர் பண்டக சாலையும் அறையும் தான் மச்சு. மற்ற பாகங்களெல்லாம் கூறை வீடாயிருந்தது. ஆனால் இந்த மச்சு மற்ற வீடுகள் முழுவதும் கூறையாயிருந்தபோது கட்டப்பட்டபடியால், அப்போது முதல் இதற்கு 'மச்சு வீடு' என்று பெயர் வந்து இப்போது 3 மாடியுள்ள வீடுகளிருந்தும் இந்த வீட்டுக்கு மச்சு வீடென்கிற பெயர் போகவில்லை. பி. ஏ. க்களும் பி. எல். களும் இக்காலத்தில் ஆயிரக்கணக்காக இருக்க, அவர்கள் அதிசயமாயிருந்த காலத்தில், பி. ஏ., பி. எல். பாஸ் செய்த ஓர் கிருஷ்ணய்யர், சுப்பிரமணிய அய்யரை இன்னும் பி. ஏ. கிருஷ்ணய்யர், பி. எல். சுப்பிரமணிய அய்யரென்று நாம் சொல்வது போல், நாம் சொல்லும் வீட்டிற்கும் இப்போது குச்சு வீடாயிருந்தபோதிலும், குச்சு வீடென்கிற பெயரே வழங்கி வந்தது. இந்த வீட்டிற்கு யஜமானனாக மகாதேவய்யர் சகல காரியங்களையும்பார்த்து வந்தபோதிலும் அவருக்கும் பெரியவர் காமேசுவரய்யரென்று ஒருவரிருந்தார். மகாதேவய்யருக்கு சேஷய்யரென்று ஓர் தம்பியுமிருந்தார். காமேசுவரய்யருக்கு மகாதேவய்யர் சொந்த தம்பியல்ல. மகாதேவய்யர், சேஷய்யர் இவர்கள் தகப்பனார் வெங்குவய்யரும், காமேசுவரய்யர் தகப்பனார் ராஜூவய்யரும் சகோதிரர்கள். ராஜூவய்யர், வெங்குவய்யர் இவர்களிறந்து வெகு காலமாகியும் குடும்பம் கலையாமல் ஒரே குடும்பமாயிருந்தது. வெங்குவய்யர் பார்த்து வந்த கிராம முன்சீப் வேலை மகாதேவய்யர் பார்த்து வந்தார். மகாதேவய்யர், குடும்பத்தில் உழைப்புள்ளவராயிருந்தபடியால், அவரே குடும்ப காரியத்தையும் பார்த்து வந்தார். காமேசுவரய்யர் வெகு நாள் அத்யானம் செய்தவராதலால், அவர் வெகு ஆசார சீலராயிருந்துகொண்டு தினந்தோறும் விடியற்காலம் காவேரிக்குபோய் ஊத்தை கூடப்போகாமல் அவசரப்பட்டுக்கொண்டு ஸ்நானம் செய்யும் வைதிக கோஷ்டியோடு சேர்ந்துகொண்டு மடிசஞ்சி ஸ்தாலி சொம்பு தவிர வேறு ஒன்று மறியாதவராயிருந்தார். பூஜை முதலியதுகள் செய்து இவர் வைதிக காரியத்தை முடிக்க தினந்தோறும் 20 நாழிகை செல்லும். சூத்திரர்களோடு பேசுவதுகூட கிடையாது. சூத்திரர்கள் அவர்கள் ஜாதியிலேயே பிராமணர்கள் பக்கத்தில் வரத் துணியமாட்டார்களென்று அவருடைய எண்ணம். ஒருநாள் அவர் வீட்டுக் கொல்லையில் ஓர் திருடன் தென்ன மரத்திலேறி தேங்காய் திருடினன். இதை காமேசுவரய்யர் கண்டுவிட்டார். திருடனும் இவரைக்கண்டு பயந்து பாதி மரம் கீழே இறங்கி விட்டான். காமேசுவரய்யருக்கு அவனைப் பிடிக்க வேண்டுமென்கிற எண்ணம். ஆனால் பக்கத்தில் ஒருவருமில்லை. வெளியே

போய் யாரையாவது கூப்பிடுகிற தென்றால் அவன் ஓடிப்போய் விடுவான். என்ன செய்கிறதென்று யோஜித்து உடனே காமேசுவரய்யர் தன் மேல்வேஷ்டியை எடுத்து ஒரு ஆள் உயரத்தில் கட்டி, 'திருடனை விட்டேனா பார். வேஷ்டியோ பிராமணன் வேஷ்டி. மரத்தில் கட்டிவிட்டேன். இந்தப்பயலோ பிராமணன் வேஷ்டியைத் தொட முடியாது. கிட்டக்கூடோ வரமுடியாது. எப்படி இறங்குவான் பார்க்கிறேன். அதற்குள் எல்லோரையும் கூட்டி வந்துவிடுகிறேன். இருக்கட்டு'மென்று வெளியே போனார். பிறகு ஊர் ஜனங்களெல்லோரையும் மரத்தில் திருடனிருப்பதாகச் சொல்லிக் கூட்டிவந்தார். மரத்தின் பக்கத்தில் வரவும் திருடனையும் காணோம்: காமேசுவரய்யர் கட்டின வேஷ்டியையும் காணோம். எல்லோரும் திருடனைத் காணோமேயென்று திகைத்து நிற்க, காமேசுவரய்யர் 'அடே பாவிப்பயலே, பிராமணன் வேஷ்டி தொடமாட்டானென்றல்லவா வேஷ்டியைக் கட்டினேன். அதையும் அடித்துக் கொண்டுபோய் விட்டானே' என்றார். எல்லோரும் இதைக்கேட்டு, காமேசுவரய்யரைக் கேலி செய்தார்கள். இப்படி காமேசுவரைய்யர் அதிகஆசாரத்தால் குடும்ப காரியமே தெரியாமலிருந்தார். சேஷய்யர் குடும்ப காரியத்தையே கவனிப்பதில்லை. சேஷய்யருக்கு பெண்சாதி வீட்டிற்கு வந்து 10வருஷமாகியும், குழந்தையொன்றும் பிறக்கவில்லை. மகாதேவய்யருக்கும் குழந்தை ஒன்றுமில்லை. காமேசுவரய்யருக்கும் அதே குறைவு ஏற்பட்டிருந்தது. சேஷய்யருக்கு பிள்ளையில்லை என்கிறகவலைபால், ஊரிலிருக்கக்கூட பிரியமில்லை. எப்போதும் ஊர்ஊராய் அலைந்து கொண்டே இருப்பார். மகாதேவய்யருக்கு அப்போது மூத்தாளிறந்து, இளையாள் கலியாணம்செய்துகொண்டு சாந்தியாகி இரண்டுவருஷமாகியிருந்தபடியால் அதிககவலை ஏற்படவில்லை. மகாதேவய்யர் ஊரில் வெகு நல்லவரென்று பெயரெடுத்துவந்ததுமல்லாமல், முன்சீப் வேலையையும் ஒருவருக்கும் பொல்லாப்பு இல்லாமல் பார்த்து வந்தார். ஜனங்களெல்லோரும் இவரை மகாராஜனாகவிருக்கவேண்டுமென்று வாழ்த்துவார்களேயல்லாமல் ஒருவராவது தூஷிக்கமாட்டார்கள். இவர் முன்சீப்வேலையில் ஊரில் ஒரு அக்கிரமமும் நடக்காது. அடிக்கடி அந்தஊர் தாசில்தார்கூட மகாதேவையரைப்பார்த்து, கேலியாக, என்னய்யா உங்களூரிலிருந்துஒரு கேசாவது வருகிறதில்லையே, பெரய்க்கேசாவது ஒன்று சிருஷ்டனை செய்து எனக்கு அனுப்பக்கூடாதா. நீங்களெல்லாம் இப்படியிருந்தால், பிறகு சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டக் கிரிமினல் கோர்ட்டுகள் எல்லாம் எப்படி பிழைக்குமென்று சொல்லுகிறவழக்கம். யதார்த்தமாகவே கிராமத்தில் ஏதாவதுதவறி ஓர்கேஸ் நடந்துவிட்ட போதிலும் அது உடனே இவரிடம்வந்து ராஜியாகிப் போய்விடும். இக்காலங்களில் சில போலீசாரும் கிராம முன்சீப்பும் ஒன்றுசேர்ந்து, கிராம முன்சீபு பொய்யாக ரிபோர்ட்டு எழுதவும் அதன்பேரில் போலீசார் சார்ஜ்செய்யவும், பிறகு இருகக்ஷியிலும் பணத்தைவாங்கி பங்கிட்டுக்கொண்டு சாக்ஷிகளைக் கலைத்து கேஸ் தள்ளுபடி யாகும்படிசெய்யும் கொடியவழக்கம் மகாதேவய்யரிடத்திலும்கிடையாது. சர்க்கார் தீர்வை வசூல் செய்வதில் ஒருவருக்கும் பொல்லாப்பு இல்லாமலும், சர்க்காருக்கும் காலதாமதமில்லாமலும் வசூல் செய்து அனுப்பிவிடுவார். கிராமத்தில் எந்தத் தகரும் இவர் போகாமல் பைசலாக மாட்டாது. கிராமங்களில் பொது மனிதனாக இருக்கும் சர்க்கார் அதிகாரி இப்படி எல்லோரிடமும் நல்லவரென்று பெயரெடுப்பது வெகு அதிசயம். இவருடைய மூத்தபெண்சாதி இறந்த காலத்தில், இவருக்காக அந்த ஊர் ஜனங்களெல்லோரும் வருத்த மடைந்தார்கள். காமேசுவரய்யருக்கு பிள்ளையில்லை என்பதில் வெகுவருத்தம். நமக்கு என்ன ரொத்திருந்தும் பயனென்ன, அதை ஆளப் பிள்ளையில்லையே என்று அடிக்கடி சொல்லிக் கொள்வார். அவருடைய மனைவி லக்ஷ்மியம்மாளும் அதே விசாரமாயிருந்தாள். அவளும் அக்குறையை நீக்கவேண்டிய பிரயத்தனமெல்லாம் செய்துவந்தாள். ராமேசுவரயாத்திரை, நாக்பரதிஷ்டை யெல்லாம் செய்தாள். யார் என்ன மருந்து சாப்பிடச்சொன்னபோதிலும் சாப்பிட்டு வந்தாள். ஒன்றும் பலிக்கவில்லை. ஆனால் லக்ஷ்மியம்மாளுக்கு மனதில், மற்ற ஓர்ப்படிமார்களுக்கும் ஒன்றுமில்லையே என்கிறதில் மட்டும் கொஞ்சம் த்ருப்தி. சேஷய்யர்சம்சாரம் ஜானகியம்மாளும் இதே விசாரமாயிருந்தாள்:

அவளுக்கு வேறொரு குறையும் சேர்ந்தது. குழந்தை யில்லாததால் சேஷய்யர் அவளை லக்ஷ்யம் செய்கிறதே யில்லை. அவளுடன் பேசுவதைக் கூட விட்டுவிட்டார். சேஷய்யர் ஊர்க் குழந்தைகளையெல்லாம் எடுத்து வைத்துக்கொண்டு கொஞ்சுவதைப் பார்க்கும்போதெல்லாம் ஜானகியம்மாள், அய்யோ நமது புருஷன் பிரியத்தை யெல்லாம் ஊர்க்குழந்தைகள் கொண்டுபோகின்றதே என்று அசூயைப்படுவாள். தனக்கு எப்படியாவது குழந்தை பிறந்தால்தான் தன்புருஷன் தன்னை லக்ஷ்யம் செய்வாரென்று தீர்மானித்தாள். அடிக்கடி தன்தோழி சுப்புவிடம் யோஜிப்பாள். சுப்பு என்பவள் ஓர் ஏழைக்குடும்பத்தில் பிறந்தவள். அவளுக்கு உற்றார் உறவினர் ஒருவருமில்லை. சேஷய்யர் தன் மாமனாருடைய ஊராகிய கண்ணனூருக்குப் போயிருந்தபோது சுப்புவின் நிலைமையைக்கண்டு பரிதபித்து, தன்பெண்சாதி ஜானகியம்மாளுக்குத் துணையாக இருக்கும்படி பூவரசநல்லூருக்குக் கூட்டி வந்துவிட்டார். ஜானகியம்மாளுக்கு தாய் இல்லாமற்போனபடியால், கலியாணமானவுடனேயே, சுப்புவுடன் பூவரசநல்லூருக்கு கூட்டிவரப்பட்டாள். மகாதேவய்யர் பெண்சாதி, மடத்தூரில் ஓர் வைதீகர்வீட்டுப்பெண். ஜானகியம்மாளுக்கு பிறந்தவீட்டில் சோற்றிற்குக் கூடவழியில்லாமற்போன போதிலும், மகாதேவய்யர் பெண்சாதியை விட தான் உயர்ந்த அந்தஸ்தென்று சொல்லிக்கொண்டு, அவளை இகழ்ச்சிசெய்து வந்தாள். மகாதேவய்யர் பெண்சாதி பார்வதியம்மாள் அதை லக்ஷ்யம் செய்வதில்லை.

ஜானகியம்மாள் நமதுகதை ஆரம்பிக்கும் காலத்தில், பூவரசநல்லூரிலில்லை. அவளும் சுப்புவும், கண்ணனூரிலிருந்தார்கள். ஜானகியம்மாள் சுமார் 10மாசத்துக்கு முன்னேயே கண்ணனூருக்கு கூட்டிப்போகப்பட்டு, அங்கிருந்தே தான் கருப்பமாயிருப்பதாக பூவரசநல்லூருச்கு சொல்லியனுப்பினாள். ஜானகியம்மாள் தகப்பனார் அக்காலத்தில், சாத்தூர் ஜமீன்தாரரிடம் ஏஜண்டாயமர்ந்திருந்தபடியால், அவர் ஜானகியம்மாளுடைய வளகாப்பு, சீமந்தம், எல்லாவற்றையும் தன்ஊரிலேயே செய்து, அங்கே, அவளுடைய புக்ககத்து ஜனங்களை வரவழைத்து முடித்தார். சில நாளைக்குப்பிறகு சுப்புவுக்கு ஓர் பெண்பிறந்து போய்விட்டதாயும், அவள்புருஷன் இறந்துபோய்விட்டதாயும், கண்ணனூரிலிருந்து பூவரசநல்லூருக்குக் கடிதம் வந்தது. ஜானகியம்மாளுக்கு ஓர் பிள்ளையாக பிறக்கவேண்டுமென்று எல்லோரும் ஆசைப் பட்டார்கள். இப்படியிருக்க முத்துவய்யர் முதலியவர்கள் வந்தமறுநாள், ஜானகியம்மாள் பிரசவித்து, ஓர் பெண்குழந்தை பிறந்ததாக கடிதம்வந்தது. மகாதேவய்யர் வீட்டில் சேஷய்யருக்கு பிள்ளைபிறக்கவில்லையே என்று ஓர் புறம் வருத்தமிருந்த போதிலும், அக்குடும்பத்திற்கு பெண்கூட இல்லாமலிருந்தபடியால் அதாவது பிறந்ததேயென்று எல்லோரும்சந்தோஷப்பட்டார்கள். மகாதேவய்யர் வீட்டில் ஓர் கலியாணம்போல முழங்கிற்று. ஊர் எல்லாம்அழைத்து பழம்சர்க்கரை தாப்பூலம் எல்லாம் கொடுத்தார்கள். அந்தவீட்டிற்கு அதிசயமாக ஓர் குழந்தை பிறந்ததில் ஊராரெல்லோரும் சந்தோஷித்தார்கள். மகாதேவய்யர் அன்று ஊர்முழுவதும் அழைத்து, வெகுசிறப்பாய் விருந்துபோட்டார். சேஷய்யர் அப்பொழுது அவருடைய கிராமமாகிய பந்தலூரிலிருந்தார். அவருக்கும் சொல்லியனுப்பப்பட்டு வந்துசேர்ந்தார். சேஷய்யருக்கும் இதைகேட்க வெகுசந்தோஷம் உண்டாயிற்று.

எஸ். இராமசாமி ஐயர். பி. ஏ.

# "MERRY WIVES" OF MODERN IND.

[AFTER SHAKESPEARE'S "MERRY WIVES OF WINDSOR."]

(*By S. Ramaswami Aiyar, B.A.*)

## கற்பைக் காப்பாற்றிய பெண்கள்.

### இந்நாடகத்தின்வேஷதாரிகள்

ராயபகதூர் பீமவர்மன்:

குணசுந்தரி, } இவர்கள் பேரில் காமங்கொண்டவன்.
பானுமதி, }

காமசந்திரன்...மோகனமாலையின் பேரில் காதல் கொண்டவன்.

விக்ரமவீரன்,

கேசவதத்தன்...விக்ரமவீரன், மருமகன்.

வீரசேனன், } இரண்டு சினேகிதர்கள்.
உக்ரசேனன், }

வாசவன்...வீரசேனனுடைய மகன்,

ப்ரதாபன்...கேசவதத்தனுடைய சினேகிதன், பள்ளிக்கூடத்து வாத்தியார்.

பாராக்ரமன்...வைத்தியர்.

சகுணன்...ஓர் பெரிய ஹோடல்காரன்.

கருப்பன், } உக்ரசேனன் ஆள்கள்.
முத்தன் }

மார்த்தாண்டன், } பீமவர்மனுடைய ஆள்கள்.
முனியன், }
வெறியன், }
வக்ரன், }

சசிலன்...கேசவதத்தனுடைய வேலைக்காரன்.

வீரன்...பாராக்ரமனுடையவேலைக்காரன்.

பானுமதி...உக்ரசேனன் பெண்சாதி.

குணசுந்தரி...வீரசேனன் பெண்சாதி

மோகனமாலை...வீரசேனன்பெண்; காமசந்திரன் பேரில் காதல்கொண்டவள்.

பத்மினி...பாராக்ரமன் சமையற்காரி.

### 4-வது அங்கம்.

#### காக்ஷி. 1.

வீரசேனன் வீடு.

குணசுந்தரி, பையன்வாசவன், பத்மினி வருகிறார்கள்.

குணசுந்தரி:—ஆனல் அவன் உக்ரசேனன் வீட்டிற்கு வந்துவிட்டானு.

பத்மினி:—அனேகமாய் வந்திருப்பான். இல்லாவிட்டால் வருகிற சமயமாகவாவது இருக்கும். அவனை தண்ணியில் எறிந்து விட்டதைப் பற்றி முன்னால் வெகு கோபமாகப் பேசினான். பானுமதி உன்னை சீக்கிரம் கூட்டிவரச் சொன்னாள்.

குணசுந்தரி:—நான் இதோ வந்துவிட்டேன். இந்தப்பையன் செவ்வையாய் படிக்கிறதில்லை. அவனை பள்ளிக்கூடத்தில் விட்டுவிட்டு வாத்யாரையும் கொஞ்சம் கண்டித்துவிட்டு சீக்கிரம் வந்துவிடுகிறேன். இதோ நல்லவேளையாய் வாத்யாரே வந்துவிட்டார்.

ப்ரதாபன் வருகிறான்.

என்ன வாத்யாரே இன்றைக்கு பள்ளிக்கூடம் இல்லையா.

ப்ரதாபன்:—இல்லை அம்மா. இன்றைக்கு பையன்களுக்கெல்லாம் லீவுகொடுத்திருக்கிறேன்.

குணசுந்தரி:—என்ன வாத்யாரே, எங்கபையன் ஒரு நாளாவது வீட்டில் பாடம் படிக்கிறதைக் காணோமே.

ப்ரதாபன்:—அடே வாசு, நீ தினம் உன் பாடங்களை படிக்கிறாயா.

வாசு:—படிக்கிறேன் ஸார்.

ப்ரதாபன்:—நேற்றுஉன்பாடத்தை படித்தாயா.

குணசுந்தரி:—படிக்கவே இல்லை.

வாசு:—படித்தேன் ஸார், வீட்டில் படிக்கவில்லை.

ப்ரதாபன்:—ஆனால் எங்கே படித்தாய்.

வாசு:—வாய்க்கால் மேட்டில்தான் ஸார் படித்தேன். தாகமாயிருந்தது, தீர்த்தம் சாப்பிட்டுவிட்டு, கரையில் உட்கார்ந்து தான் படித்தேனே.

ப்ரதாபன்:—வாய்க்காலில் நேற்றுஜலம் ஏதடா? ஜலமே இல்லையே.

வாசு:—இல்லே ஸார் ஜலம் இருந்ததென்று கேசவன் தான் சொன்னானே.

ப்ரதாபன்:—திருட்டுப் பயலே! அம்மா இவனும், அந்த கோடிவீட்டுக்காரபைப்பயன் காமசர்மனும் திருட்டுப்பயல்கள், பள்ளிக்கூடத்திற்கு சரியாவருகிறதில்லை, அடே வாசு காமசர்மன் எங்கேடாகாணோம்.

வாசு :—அவன் செத்துப்போய் விட்டான்ஸார்.

ப்ரதாபன் :—அடே மூன்றும்நாள் இருந்தானே. உனக்கு யாரடா சொன்னார்கள்.

வாசு :—அவன்தான் நேற்று சொன்னனே.

ப்ரதாபன் :—முட்டாள் அவன் செத்தவன் சொல்லவாவது. என்ன உளருகிறாய்.

வாசு :—இல்லே ஸார். நீங்கள் கேட்டால் செத்துப்போய் விட்டதாக சொல்லச்சொன்னான்.

ப்ரதாபன் :—திருட்டுப்பயல் அப்படி சொன்னால் தேடாமல் இருப்பார்களென்று சொன்னனே.

குணசுந்தரி :—என்ன வாத்யாரே எங்கபையனுக்கு நாலும் ஐந்தும் என்னவென்று கேட்டால் கூட சொல்லத் தெரிய வில்லையே. அவன் தகப்பனர் அவனை உங்கள் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதில ஒன்றும் பயனில்லையென்று சொல்கிறார்.

ப்ரதாபன் :—என் அப்படி சொல்லுகிறீர்கள். இப்போது என்முன்பாக கேளுங்களேன் பார்ப்போம்.

குணசுந்தரி :—வாசு எங்கேசொல் நாலும் ஐந்தும் என்ன?

வாசு :—(விரல்களால் எண்ணிக்கொண்டு) 5,6,7, 8,9,10,11,12,13.

குணசுந்தரி :—என்ன வாத்யாரே இந்தப்பையனை வைத்துக்கொண்டு என்னசெய்கிறது.

ப்ரதாபன் :—என்ன அம்மா. குழந்தைகளை இப்படித்தானு கணக்கு கேழ்க்கிறது. நீங்கள்கேழ்ப்பதே மிரட்டுவது போலிருக்கிறதே. நான் கேழ்க்கிறேன் பாருங்கள்! அவர்களை உத்ஸாகப்படுத்திக் கொண்டே நிதானமாய் கேழ்க்கவேண்டும். வாசு எங்கே நாலும் ஐந்தும் சொல்லுவாசு, நல்ல கெட்டிக்காரன்.

வாசு!—(மறுபடி விரல்விட்டுக்கொண்டு) ஐந்து,

ப்ரதாபன் :—உம்,

வாசு! —ஆறு,

ப்ரதாபன்:—உம்,

வாசு:—ஏழு,

ப்ரதாபன்:—உம்,

வாசு :—எட்டு,

ப்ரதாபன்:—உம்,

வாசு :—ஒன்பது,

ப்ரதாபன்:—ஊ.

வாசு :—9 ஸார்.

குணசுந்தரி :—வாத்யாரே இப்படி பையன்களுக்கு அடையாளங்கள் வைத்துக்கொண்டு சொல்லிக் கொடுத்தால் அவர்களுக்கு என்னபடிப்புவரும்.

ப்ரதாபன்.—அம்மாதாங்கள் கேழ்க்கத்தெரியாமல் கேட்டுவிட்டு வாத்தியார்களை தூஷிக்கலாமா. இனி இப்படி தூஷிக்காதேயுங்கள்.

குணசுந்தரி :—நல்லது கணக்கு இருக்கட்டும். வேறுபாடங்களைக் கேளுங்கள்.

ப்ரதாபன் :—வாசு, பூமியின் வடிவம் எப்படி இருக்கிறது.

வாசு :—புதன்கிழமை உருண்டையாயும், சனிக்கிழமை தட்டையாயும், மற்றநாள்களில் ஒருவருக்கும் தெரியாமல் இருக்கும்.

ப்ரதாபன் :—அடேமடையா, உனக்குயார் இப்படி சொன்னது.

வாசு :—நீங்கள்தானே ஸார்-உங்கள்பொடிபோடுகிற ஏனம்போல இருக்குமென்று சொன்னீர்கள். அதை புதன்கிழமையும் சனிக்கிழமையும் தானே கொண்டு வருகிறீர்கள். மற்ற நாள்களெல்லாம் அந்த ஏனம் தெரிகிறதில்லையே. மேலும்புதன் கிழமைநீங்கள் உருண்டை குடுக்கை கொண்டு வருகிறீர்கள். சனிக்கிழமை பொடிடப்பி கொண்டுவருகிறீர்களே. எனக்கு இதெல்லாம் தெரியாதா! நான் அதற்குள் மறந்து விடுவேனு.

குணசுந்தரி :—வாத்யாரே பையன்களுக்கு இப்படியா சொல்லிக் கொடுக்கிறது?

ப்ரதாபன் :—என்ன அம்மா ஞாயத்துக்காக சொல்லிக் கொடுத்தால், அதை இப்படி விபரீதமாக அர்த்தம் பண்ணிக்கொண்டால் என்ன செய்கிறது. உங்கள் பையன் இப்படிப்பட்ட யுக்திகளில் வெகு கெட்டிக்காரனுக இருக்கிறான்.

குணசுந்தரி :—நல்லது, இன்னும் ஏதாவது கேளுங்கள்.

ப்ரதாபன் :—அடே வாசு, உனக்கு முன்னமேயே ஒரு வாசகம் சொல்லி அர்த்தம் சொல்லிக்கொடுத்திருக்கிறேனல்லவா. 'இன்றைக்கு என்பதை நாளைக்கு என்று வைக்காதே' என்றால் என்ன?

வாசு :—இன்றைக்கு ஏதாவது செய்யவேண்டிய காரியமிருந்தால் நாளைக்கு அதை செய்யலாமென்று நினைத்து, இன்றைக்கு ஒன்றும் செய்யாமல் இருக்கக்கூடாது.

ப்ரதாபன் :—நல்லது, இதை சொல்லி விட்டாய். இதற்கு திருஷ்டாந்தம் ஒன்று சொல் கேழ்ப்போம்.

வாசு :—ஆத்தில் பக்ஷணம் பண்ணிவைத்திருந்தால், அதை நாளைக்கு என்று வைத்திருப்பது கூடாது. அன்றைக்கே தின்று விடவேண்டும்.

ப்ரதாபன் :—அடேமுட்டாள், நான் சொல்லிக் கொடுத்த உதாரணத்தை விட்டு, இதையா சொல்லுகிறது. அம்மா நான் கேலிக்கு இப்படி சொல்லாதேயுங்கள் என்று சொன்னேன். இவன் நன்றாய் கவனிக்காததால் இதுதான் உதாரணமென்று நினைத்திருக்கிறான். இவனுடன் நான் என்ன செய்கிறது.

குணசுந்தரி:— வாத்யாரே பையன் வெகு முட்டாளாயிருக்கிருனே இதற்கு என்ன செய்கிறது.

ப்ரதாபன்:—அம்மா நீங்கள் பயப்படவேண்டாம். சிறுவயதில் முட்டாளாயிருக்கிற பையன்கள் வயதானல் புத்திமான்களாவார்கள். சிறுவயதில் புத்திமான்களாயிருப்பவர்கள் வயதானல் முட்டாளாள்களாவார்கள்.

வாசு:—அம்மா வாத்யார் தான் சிறுவயதில்ரொம்பவும் புத்திமானுக இருந்ததாக அன்றைக்குச் சொன்னர்.

குணசுந்தரி:—அடே அப்படி சொல்லாதே யடா: ஆனல் வாத்யார் இப்போது முட்டாளா! நல்லது, வாத்யாரே, இனி பையன்களுக்கு நன்ருய் சொல்லித்தரவேண்டும். நல்லது, வாசு உன்பாடத்தை நன்ருய்படி. பத்மினி நாம்போகலாம். ஓகோ ரொம்பவும் நாழிகையாகிவிட்டதே (போகிருர்கள்.)

(இன்னும் வரும்.)

## AN APPEAL TO HINDUS BY Mrs. ANNIE BESANT.

## * அந்நிபெஸன்டு அம்மையாரின் ஓர் விஞ்ஞாபனம்.

ஹிந்து சமயிகளே! இந்துமதத்தைக் காப்பாற்றும் கடமை முக்கிய மென்பதைப் பற்றி நான் வற்புறுத்திக்கொண்டு வருகிறேன். ஏனெனில் இந்தியாவின் வருங்கால நிலைமை உங்கள் கைக்குள்ளே இருக்கிறது. இந்தியா தன் மதத்தை "இழப்பதினுங்கேடு ஒன்று மில்லை." தற்கால நாகரீகம் உங்களிட மில்லையென நீங்கள் கவலை கொள்ளன்மின். அந்நாகரீகம் மட்டுக்கு மிஞ்சியே உங்களிடம் இனி அமையப்பெறுவதாகும். அதன் உற்ற காலம் வந்தே தீரும். அஃது ஒவ்வொரு ஜாதியாரின் தள்ளாத்தலைவிதிப்படி நடந்தே தீரும். தற்கால மனிதர்களுடைய நோக்கமும், அவர்கள் மனோபாவமும், ஜடப்பொருளின் பகட்டால் அவர்களுக் குண்டாயிருக்கும் மதிமயக்கமும் மாயாவியான மேற்றிசை ஜாதியாரின் மதிநுட்பமான வல்லமையும், ஆக இவைகளெல்லாமுடைய 20-ம்நூற்ருண்டின் வெளிப்பகட்டான நாகரீகம், இந்தியாவுக்கு வந்தேவிடும். அது திண்ணம். ஆனல் இந்நாகரிகம் அதிகப்பட அதிகப்பட, ஒரு பெரிய அபாயமோ தலைமேல் நிற்கிறது. அது உண்மை. அது நெருங்கின அபாயம். அது என்ன வென்ருல், இந்தியா தன் சநாதன தர்மத்தை இழப்பதேயாம். ஆட்டுக்கடாச் சண்டையில் நரி செத்தாற் போல், பழைய நாகரீகத்திற்கும் புதிய நாகரீகத்திற்கும் உண்டாகும் போரில் சநாதன தர்மம் பொய்த்துப்போகலாகும். ஹிந்துக்கள் ஹிந்து மதத்தைக் காப்பாற்ருவிடின், எவர்தான் அதைக் காப்பாற்றுவார்; இந்தியாவின் சொந்த மக்களே தங்கள் சமயத்தில் சிரத்தை யில்லாமல் இருந்தால், பின் யாவர் அதைப் பாதுகாப்பார்கள்? ஹிந்துக்களே இந்தியாவைப் போற்ற முடியும். இந்தியாவும் ஹிந்து மதமும் ஒன்றே. நீங்கள் செய்து முடிக்கக் கூடியதை மேனாட்டுச் சரீரம் பெற்றுள்ள யாவராலும் செய்ய ஒண்ணுது. நான் ஹிந்து அல்லாத ஏனைய சரீரத்தோடு இந்தியாவினிடத்தில் எவ்வளவு அன்பு பாராட்டிடினும், எவ்வளவு மனப்பூர்வமான கைங்கிரியம் செய்திடினும், எவ்வளவு பரிபூர்ண பக்திபாராட்டினும், இந்தியாவின் புத்திரர்களாகிய நீங்கள் செய்யக்கூடியதுபோல், நான் செய்யமுடியாது. ஹிந்துவாய்ப் பிறந்தாலன்றி ஹிந்துவாக முடியாது. ஒருவன் ஹிந்து மதத்துக்கு எவ்வளவு தான் உழைக்கட்டும், ஹிந்துவின் ஆசார சீலங்களை எவ்வளவு தான பின்பற்றி பழகட்டும், ஹிந்துமத சித்தாந்தங்களில் எவ்வளவு தான் நன்னம்பிக்கை வைக்கட்டும், ஹிந்துவாகப் பிறவாத ஒருவனை, ஹிந்துவாக ஆக்கமுடியவே முடியாது. ஆதலின் என் போலியர் ஹிந்துமத இருதயத்தோடு கூடியிருந்தாலும், முன் ஜன்மங்களில் ஹிந்துவாகவே இருந்திடினும், நாங்கள் உங்களுக்கு வெளியில் புறம்பாக விருந்து, உதவி மட்டுமே புரியக்கூடுமே அல்லாது, வேறு ஒன்றும் இயலாது. எங்கள் உதவி வழி காட்டுமே அல்லாது ஊட்ட முடியாது. நீங்கள் நேரில் வேலைகளை முடிக்க வேண்டியவர்கள். சிறிதும் கலங்கன்மின். ஹிந்

* Adapted from a lecture of Mrs Annie Besant and issued as a tract by the Madura Hall of Theosophy.

துமதமன்றி இந்தியாவுக்கு இனிக் கதி மோக்ஷமில்லை. ஹிந்து மதமென்றவேர்கள் இந்தியா என்ற மண்ணின்கண் ஊன்றிப் போயிருக்கின்றன. அதைவிட்டு அவ்வேர்களைக் களைந்தெரிந்தால் இடம் விட்டுப் பெயர்த்த விருக்ஷம்போல் வாடி வதங்கிப் போவது திண்ணம். இந்தியாவில் தற்காலம் செழித்து வாழ்கின்ற மதங்கள் பல. ஜாதிகள் பல. ஆனால் அவைகளில் எதுவும் வெகு காலத்திற்கு முன்னிருந்ததன்று. ஒருமை பற்றிக் கூடிவாழ்தற்கு அவைகள் அவசியமுமில்லை. ஒவ்வொன்றும் வந்த விதமே போகுதலும் கூடும். இந்தியாமட்டும் இருக்கவே செய்யும். ஹிந்து மதம் போனாலோ இந்தியாவின் கதி யென்ன? வெறும் வார்த்தையாகத் தங்கி யிருக்கும்.—வாசனை போன சொப்பாக மாத்திர மிருக்கும். ஆனால் அதன் சரித்திரம், அதன் கிரந்தங்கள், அதன் கலைக்ஞானங்கள், அதன் ஞாபகக் குறிப்புக்கள், இவை எல்லாவற்றிலும் குறுக்கே ஹிந்து மதத்தின் பாவங்கள் ஊடுருவிப் பாய்ந்து பின்னி யிருக்கின்றன.

ஸொராஸ்ட்டரின் மதம் (பார்ஸியார்களின் சமயம்) இங்கு ஒதுக்கிடம் தேடிப்புகுந்து அன்பான ஆதரவடைந்து இதனை அடைக்கல ஸ்தானமாக்கிக் கொண்டது. அம்மதம் போய்விடக் கூடுமானாலும் இந்தியா நின்றநிலையிலேயே நிற்கும். புத்த மதம் இங்கு முதலில் உண்டானது. அது இந்தியாவை விட்டுப் போயிடினும் இந்தியா போகாமல் நிலை நிற்கின்றது. மகமதிய சமயம் ஜயதரங்கத்தை முழக்கிக்கொண்டு வந்தது. மகமதியர், இந்திய ஜனங்களோடு ஜனங்களாய்ப் பங்காளியாகி விட்டார்கள். இனி நடக்கும் நடவடிக்கைகளிலும் அவ்வாறே ஆவார்கள். இருந்தாலும் இஸ்லாம் மதம இந்தியாவை விட்டு ஒருக்கால் போய்விட்டாலும் விடலாம். இந்தியாமட்டும் போகாமல் நிலை நிற்பதாகும். கிருஸ்தவர்கள் தேசத்தை ஆளுகிறார்கள். கிருஸ்துமதம் அபிவிருத்தி யாகிக்கொண்டு வருகிறது. இருந்தாலும் கிருஸ்து மதம் குன்றிப் பின்னர் மறைவதாகும். அப்பொழுதும் இந்தியா மட்டும் நிலை நிற்கும் என்பதிற்கு ஐயமில்லை. அவர்கள் வருகைக்கு முன்னும் இந்தியா இருந்தது. அவர்கள் போன பிறகும் இந்தியா இருக்கும். இந்தியாவின் தொட்டில் தொடங்கி வரும் ஹிந்து மதம் ஒழிந்தாலோ இந்தியா இடுகாட்டையடைய வேண்டியதுதான். அப்பொழுது இந்தியாவும் அதன் மதமும் எகிப்தும் அதன் மதமும் போல் பூர்வஞாபகச் சின்னமாக மட்டும் நிற்பதாகும். பழங்கதையாக முடியும். அந்நிலையில், இந்தியா பழைய சாஸன ஆராய்ச்சிக்காரர்களுக்குமட்டும் விஷயமாகும். இறந்த பின்னர், அறுத்துப்பார்த்து பரிசோதனை பண்ணதக்கப் பிரேதம்போல நிற்பதாகும். ஒருக்காலும் தேசாபிமானத்துக் குரியதாகாது. உலகத்துள் ஒரு ஜாதியாருக்கு அந்தஸ்துக்குரியதாயு மிராது. ஹிந்து மதத்தை நீங்கள் கைநழுவவிட்டால் உங்கள் தாயை இருதய கமலத்தில் குத்தினவர் ஆவீர்கள். அத்தாயின் ஜீவரத்தமதாம் ஹிந்து மதம் கொப்பளிக்க அவள் ஜீவனும்

"குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு".

என்ற வண்ணம் வெளியேறிப்போம். காயப்பட்டு, தொந்தரவுபட்டு, ஜயிக்கப்பட்டு, தாழ்த்தப்பட்டு, அம்மாது கிரீடமிழந்த அரசியைப்போல் இப்போது இருக்கிறாள். அப்படி யிருந்தும், அவள் மதம் அவளை ஜீவிக்கச் செய்கிறது. இல்லாவிடில் அவள் செத்தவர்களோடு கணக்கிடப் பட்டிருப்பாள். வருங்கால வாழ்வை நீங்கள் மதிக்கும் பொழுதும், உங்கள் தாய்ப் பூமியை நீங்கள் நேசிக்கும் பொழுதும் உங்கள் பூர்வமதத்தின் பற்றை விடன்மின். இந்தியாவின் ஜீவ ஆஸ்பதமான சம்பந்தத்தினின்றும் ஒருக்காலும் ஏமாந்து நீங்கன்மின். ஹிந்துவாய்ப்பிறந்த பாத்திரங்களில் தவிர வேறு எம்மதப் பாத்திரத்திலும் ஆத்மார்த்தமான விஷயங்கள் வார்க்க முடியாது. இதனிலும் உயர்ந்தவும் விலைமதிப்புள்ளவுமான வேறு பாத்திரங்களும் கிடையா.

ஆகையால் உங்கள் உயிருக்கு உயிராக இருக்கிற ஹிந்து மதத்தை விசுவாசத்துடன் போற்றுமின். மேலும் எவ்வித அசுத்தகரமும் இவ்வுயர்வு பற்றிய சமயத்தைத் தீண்டாமலிருக்கும் வண்ணம் போற்றுமின்.

"உள்நாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந்தே யத்துக்குறு துணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்துவாழ்வீ ரீங்கென."

ஓம் தத்ஸத்.